உ

சிவமயம்.

கணபதி துணை.




# கண்டதேவிப்புராணம்.

திரிசிரபுரம் மஹாவித்துவான்

**மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்**

இயற்றியது.

இஃது

சிவநேசம்பொருந்திய

வெளிமுத்தி

**வயிரவஐயாவவர்கள்**

அநுமதிப்படி

தேவகோட்டை

மு. குப்பான்செட்டியாரவர்கள்

குமாரர்

**முத்தரசப்பசெட்டியாரால்**

சென்னை

இலக்ஷ்மீவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

யுவ௵ - புரட்டாசிமீ.

29-4

உ

# சூசிபத்திரம்

| பக்கம். | படலம். | பாட்டுத்தொகை. |
|---|---|---|
| க | கடவுள்வாழ்த்து | உச |
| ரு | அவையடக்கம் | ரு |
| ஷை | சிறப்புப்பாயிரம் | க |
| சு | திருநாட்டுப்படலம் | அ0 |
| கரு | திருநகரப்படலம் | கூ0 |
| உரு | நைமிசப்படலம் | ஙஎ |
| உசு | திருக்கண்புதைத்தப்படலம் | எரு |
| ஙஎ | தேவிதவம்புரிப்படலம் | ரு0 |
| சங | தேவியைக்கண்ணுற்றபடலம் | ரு0 |
| சகூ | சண்டாசுரன்வதைப்படலம் | கஙஉ |
| சுங | திருக்கலியாணப்படலம் | கூ0 |
| எங | உருத்திரதீர்த்தப்படலம் | கஎ |
| எரு | விட்டுணுதீர்த்தப்படலம் | கஅ |
| எசு | பிரமதீர்த்தப்படலம் | கசு |
| எஎ | சூரியதீர்த்தப்படலம் | கரு |
| எகூ | சந்திரதீர்த்தப்படலம் | உஎ |
| அக | சடாயுபூசைப்படலம் | ச0 |
| அரு | காங்கேயன்பூசைப்படலம் | ஙக |
| அஅ | பொன்மாரிபொழிந்தபடலம் | ஙஎ |
| கூங | சிலைமான்வதைப்படலம் | கஅ |
| கூச | சிவகங்கைப்படலம் | கரு |
| கூசு | தலவிசேடப்படலம் | கசு |
| | | ஆ திருவிருத்தம். அஅச. |

# சோதனபத்திரம்.

| பக்கம். | பாட்டு. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௭ | ௧0 | மாதே | மாதோ |
| ௧0 | ௩௮ | பலர்சு | பலாசு |
| ஷ | ௪௩ | பொருனே | பொருனை |
| ஷ | ௪௪ | பொருனே | பொருனை |
| ௧௧ | ௪௫ | பொருனே | பொருனை |
| ௨0 | ௫௨ | வள்ளிவ | வள்ளிய |
| ௨௬ | ௧௮ | சவுனக | சவுநக |
| ௩௫ | ௬௧ | மமம்ருழ | மம்மருழ |
| ௩௮ | ௧0 | லாவையி | லாவயி |
| ௪௩ | ௩ | திருகறவுருள் | திருகறவருள் |
| ௪௪ | ௧௩ | நாட்டினின | நாட்டினனி |
| ஷ | ௧௪ | வென்கொடு | வெங்கொடு |
| ௪௫ | ௧௯ | னமர்வர்ன | னமர்வான |
| ௬0 | ௧00 | நுதித்துளே | நுதித்துனே |
| ௭௪ | ௭ | கிளர்பேத | கிளரபேத |
| ஷ | ௧௩ | வேய்துவர் | வெய்துவர் |
| ௮௩ | ௨௫ | றிவனிலே | றிவணிலே |
| ௮௪ | ௩௪ | காட்சீ | காட்சி |
| ௮௫ | ௧ | ணிருண்முக | ணிருண்முக |
| ௮௭ | ௨௪ | யள்ளுன் | யன்னுன் |
| ௯௨ | ௩௭ | கோட்டி | கேட்டி |

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கண்டதேவிப்புராணம்.

## கடவுள்வாழ்த்து.

### விநாயகர்.

பூமேவுப்பிறையொருபாற்பெருமான்பின்பாற்றழுவிப்புணர்ந்தோன்றாய
மாமேவுபெண்பாலாண்பாலொடுமாறுறநெறிந்துமாறாமே
தூமேவுமுன்பால்வந்துறத்தழீஇயொருமருப்பாற்றுணைப்பாலாய
தேமேவுமுகமலரும்வலம்புரிக்குஞ்சரத்திருதாள்சேர்ந்துவாழ்வாம்.

### சொர்ன்னவருடேசர்.

மாமேவுகட்டவுளருந்தடவுளருஞ்சுரும்பமர்பூமாலைவேந்துங்
கோமேவுமலரானும்பலரானும்புகழ்திகிரிக்குரிசிலானுந்
தேமேவுபண்ணவருநண்ணவருள்சுரந்துகண்டதேவிமேவும்
பாமேவுபுகழ்ச்செம்பொன்மாரிபொழிந்தவர்மலர்த்தாள்பரசிவாழ்வாம். (௨)

தேமாரியமன்பதைகளுளங்கருதியன்னையுஞ்சீர்திகழ்பிதாவு
மாமாரியனுமுலவாப்பெருங்கதியுநீயேயென்றடைந்துபோற்றக்
காமாரியாயிருந்துங்கவுமாரியொடுங்கலந்தகருணைமூர்த்தி
பூமாரிசுரர்பொழியப்பொன்மாரிபொழிந்தபிரான்பொற்றாள்போற்றி. (௩)

### பெரியநாயகி.

சொற்றபெரும்புவனமெலாமொருங்கீன்றபெருந்தலைமைத்தோற்றத்தாளே
கொற்றமிகுபெருங்கருணைசுரக்குமிறைமையினாளேகுமரியாயுங்
கற்றமையிப்பெயர்பூண்டாயெனுமருதவாணமொதிர்கனிவாயுள்ளாற்
சற்றமையமுறுவலித்துமகிழ்பெரியநாயகிதாடலைமேற்கொள்வாம். (௪)

வாய்ந்தபராசத்தியாய்விந்துவாய்மனோன்மணியாய்மகேசையாய்ச்சீர்
வேய்ந்தவுமையாய்த்திருவாய்ப்பாரதியாயிவரன்றிவேறாயின்று
மேய்ந்தசிறையிலிநாதனெத்திறநிற்பானதனுக்கியையநின்றே
தோய்ந்தவுயிர்க்கின்புதவும்பெரியநாயகிதுணைத்தாடொழுதுவாழ்வாம். (௫)

சபாநாயகர்.

மறையாதியியம்புகுறிகுணங்கடந்தோனைந்தெழுத்தேவடிவமாகி
நிறையாதிபடைப்பாதிதடியாதியோனாந்துநிகழ்த்தநாளு
மிறையாதிதவிர்ந்திருவர்வியந்தேத்தவுமைதிருக்கண்விழைந்துசாத்த
வறையாதிமணிமன்றுணடநவிலும்பெருவாழ்வையடுத்துவாழ்வாம். (௬)

சிவகாமியம்மை.

ஆன்றதாயடைந்தசுகங்கருவுமடைதருமாலென்றறைகூற்றிற்கோர்
சான்றதாயெவ்வுயிருமடையின்பந்தானடையுந்தவாவின்பாக
நான்றதாய்மிளிர்சடிலநாதனியற்றுனந்தநடனங்காணு
மீன்றதாய்சிவகாமவல்லியிருதாமரைத்தாளிறைஞ்சிவாழ்வாம். (௭)

தட்சணாமூர்த்தி.

வேறு.

ஆய்தருபொருளுமாராய்ந்தடிநிழலடங்குமாண்பும்
வேய்தருமலர்நேரங்கைவிரலிருகூற்றிற்றேற்றித்
தோய்தருமுனிவர்நால்வர்துதித்திடக்கல்லாலென்னும்
பாய்தருவடிவாழ்முக்கட்பரனடிக்கன்புசெய்வாம். (௮)

வயிரவர்.

புகர்படுசெருக்குமேவல்புன்மையென்றெவருந்தேறப்
பகர்மறைகமழாநிற்கும்பரிகலமங்கையேந்தி
நிகரின்மான்முதலோர்மேனிநெய்த்தோர்கொண்டொளிர்பொன்மாரி
நகரினிதமர்ந்துவாழும்வடுகனைநயந்துவாழ்வாம். (௯)

மருதவிருட்சம்.

வேறு.

பரவியநாதமூலமாப்பரானைபணைகிளைகொம்பொடுவளாரும்
விரவியபஞ்சசத்தியாத்தளிர்கள்வேதமார்மலர்களாகமமாக்
கரவியலாதவாசமைந்தெழுத்தாக்காமருசுகோதயமதுவா
வுரவியன்ஞானசொரூபமேயாகியொளிர்தருமருதினைத்துதிப்பாம். (௧௰)

வலம்புரிவிநாயகர்.

வேறு.

ஓங்குபெருந்தனக்கினமாயுற்றமதவாரணங்களொருங்குதேம்பி
யேங்குதிறமுறவருத்திவணக்கிடுமங்குசபாசமென்னுநாமந்
தாங்குபடையிரண்டுமொருதனைவணங்கக்கரத்தேந்தித்தலைமைபூண்டு
தேங்குநெடுங்கருணைபொழிவலம்புரிக்குஞ்சரத்திருதாள்சென்னிசேர்ப்பாம். ()

சுப்பிரமணியர்.

வெயிலேறவிரிக்குமுடிவானவர்விண்குடியேறவெள்ளையானை
குயிலேறவுரிபிரமர்புள்ளேறவம்மனைவோர்கூடாமாதர்

கயிலேறமிளிர்கடகக்கையேறமெய்யேறக்கவிஞர்தன்கை
யயிலேறவமர்ந்துசிறைமயிலேறும்பெருமானையடுத்துவாழ்வாம். (௧௨)

திருநந்திதேவர்.

வேறு.

வரைபொடிபடுக்கும்வச்சிரப்படையும்வலிசெழுதண்டவெம்படையும்
விரைசெலற்றிறத்தின்மாற்றலர்நடுங்கும்விளங்கொளித்திகிரியம்படையும்
புரையமைசமழ்ப்புப்பொருந்தவில்வீசிப்பொலியும்வேத்திரப்படைதாங்கி
யுரையமைகயிலைகாத்தருணந்தியொருவனைமருவியேத்தெடுப்பாம். (௧௩)

தமிழாசிரியர்.

வேறு.

பன்னிருதடக்கைச்செம்மல்பாற்சிவஞானம்பெற்றுப்
பன்னிருகதிருமொன்றும்பான்மையின்விளங்கிநாளும்
பன்னிருதவமாணாக்கர்ப்பழிச்சிடமலையமேவப்
பன்னிருசாணநாளுந்தலைக்கொடுபரவுவோமே. (௧௪)

திருஞானசம்பந்தசுவாமிகள்.

அறைவடமொழிநவின்றபாணினியகத்துநாண
விறையமர்மயிலைமூதூரிருந்தவோர்தாதுகொண்டே
நிறைதரவொராறுமேலுநிரப்புதென்மொழிநவின்ற
மறையவன்காழிவேந்தன்மலரடிக்கன்புசெய்வாம். (௧௫)

திருநாவுக்கரசுசுவாமிகள்.

நீற்றுமெய்ச்சிவனேயென்றுமவனினுநிறைந்தாரொன்றுஞ்
சாற்றுதற்கியையத்தந்தைதன்பரியாயப்பேரு
வீற்றுமெய்கெடுத்தொன்றிற்பன்னிரண்டன்மெய்கொடுத்துக்கூறத்
தோற்றுமெய்ப்புகழ்சானாவிற்கரசினைத்தொழுதுவாழ்வாம். (௧௬)

சுந்தரமூர்த்திசுவாமிகள்.

எண்ணியமறுமைப்பேறுமிம்மையேயுற்றதென்ன
மண்ணியவியங்கும்வெள்ளிமால்வரையெருத்தமேறி
யண்ணியவியங்காவெள்ளிமால்வரையடைந்துவாழும்
புண்ணியமூர்த்திநாவற்புலவனைப்போற்றிவாழ்வாம். (௧௭)

மாணிக்கவாசக சுவாமிகள்.

மாயவன்றியாப்பாதமலரவன்மனைவிமேனி
தோயவுமலரோன்காணாச்சுடர்முடியனையானின்ற
பாயநீருடுத்தமங்கையிவரவுமுருகிப்பாடுந்
தூயவர்கமலபாதத்துணையுளத்திருத்திவாழ்வாம். (௧௮)

சண்டீசநாயனார்.

மலர்புரைகுடங்கைவெள்வாய்மழுப்படையொன்றுதாங்கி
யலர்பசுவோம்பியின்னமுண்ணுதலாதியாவும்
பலர்புகழ்தனக்கென்றென்றும்வேண்டிலாப்பரன்போற்கொண்ட
நலர்செறிசேய்ஞலூர்வாழ்பிள்ளையைநயத்தல்செய்வாம். (க௯)

அறுபத்துமூன்றுநாயன்மார்.

வேறு.

பூண்றதன்மையில்புன்மையேநெஞ்சசத்
தேன்றவஞ்சகமாதியிருப்பினுந்
தோன்றவோர்புரஞ்சூழ்ந்துறவாழ்வரா
லான்றமேன்மையறுபத்துமூவரே. (உ0)

பஞ்சாக்கரதேசிகர்.

வேறு.

பூதங்கடந்துபொறிகடந்துபுலனுங்கடந்துபுகல்கரண
பேதங்கடந்துகாலமுதலனைத்துங்கடந்துபெருவிந்து
நாதங்கடந்துவளர்துறைசைநமச்சிவாயதேசிகன்பொற்
பாதங்கடந்துபற்றறுத்தானினிமேலல்லற்படலிலையே. (உக)

அம்பலவாணதேசிகர்.

வேறு.

மருடருவினைகடேய்த்தோமாமலக்குறும்புமாய்த்தோ
மிருடருபிறப்பில்வாரோமென்றுமோரியல்பிற்றீரோ
மருடருதுறைசைமேவுமம்பலவாணதேவன்
பொருடருகமலத்தாளெந்தலைமிசைப்புனைந்தபோதே. (உஉ)

சித்தாந்தசைவர்கள்.

பண்ணியபுறமார்க்கங்கள்பாழ்படவொழித்துமேலாம்
புண்ணியவிபூதியக்கமணியொடைந்தெழுத்தும்போற்றி
யண்ணியசிவானந்தத்தேனிரம்பவுண்டமையாநிற்கும்
தண்ணியகுணசித்தாந்தசைவரைவணக்கஞ்செய்வாம் (உங)

ஆலயப்பணிசெய்வோர்கள்.

அரவுநீர்ச்சடையானெங்களம்மையோடகிலமெல்லாம்
பரவுமாறமர்பொன்மாரிப்பதிப்பெருந்தளியிற்றொண்டின்
விரவுநான்மறையோராதியலகிடல்விழைந்தோரீரு
முரவுசேர்தவத்தர்யாருமுவந்தியாந்தொழுந்தேவாவார். (உச)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

தளைபுகழ்வேதசாரமாம்விபூதிசாதனமேபொருளாக்கொண்
டுளைபுகழ்சிறந்ததேவிசாலப்பேருத்தமவணிகர்கள்யாரும்
வளைபுகழமைந்தகண்டதேவியிற்பொன்மாரிபெய்தருளியபெருமான்
குளைபுகழ்விளங்குதெய்வமான்மியமாய்ச்குலவியபெருவடமொழியை. (க)

மொழிபெயர்த்தெடுத்துமதுரமிக்கொழுகிமுழங்கிமுப்புவனமும்போற்றப்
பழிதபுத்துயர்ந்துபரவுசெந்தமிழாற்பாடுகவென்றலுமனையார்
கழிசிறப்புவகைமீக்கொளப்புகன்றகட்டுளைமறுப்பதற்கஞ்சி
யுழிதரற்றகையமனமுடையானுமுளைசெயத்துணிந்தனன்மன்னோ. (உ)

வேறு.

இருவகையெழுத்துமல்லாவாய்தமுற்குறிலுமீற்று
மருவுவல்லெழுத்துங்கூடவன்னமாயெழுதல்போல
விருவகைவழக்குமல்லாவென்கவியிறைவன்சீரு
மருவுநற்பெரியோரான்புங்கூட்டலான்மதிக்கும்பாவாம். (ங)

வேறு.

மறைமுழுதுணர்ந்தசிறையுடைக்கழுகுவானகந்துருவியுமுணரர்ப்
பிறைவளர்முடிமேற்சிறையிலாக்கழுகுபெய்தபூநிறைதாக்கொண்ட
விறையவன்செவிகற்றுணர்ந்தவர்மொழிபாவேற்றலிற்கற்றுணராத
குறையினேன்மொழியும்பாக்களுமேற்குங்குறித்துணர்பொருட்டிறமதனால். (ச)

மறையவனுணராமதிமுடிப்பெருமான்மருதமர்வணப்பெருங்கோயி
லுறைபவன்புராணமுளைக்குநீபொருளுக்கொக்குமாறுளைப்பைகொலென்னி
னிறையவனருளாலியன்றமட்டுளைப்பேனிமித்தகாரணனெனக்கந்த
விறையவன்குலாலனென்றுளைத்ததுதானெற்றுமற்றற்றுணர்ந்தவரே. (ரு)

அவையடக்க முற்றிற்று.

## சிறப்புப்பாயிரம்.

இலங்குமதிநதிபொதியுஞ்சடிலத்தெம்மா
    னினிதுமகிழ்ந்திருக்குமுயர்கண்டதேவித்
தலங்குலவுமான்மியநன்செம்மனோர்க
    டருக்கியுணவமுதுகுசெந்தமிழாற்செய்தா
னலங்குலவுஞானகலைமுதலாவெண்ணி
    னவில்கலைகளுந்தெரிந்தநல்லோனெங்குந்
துலங்குபெரும்புகழ்படைத்தவொருமீனாட்சி
    சுந்தரநாவலவனுயர்தோற்றத்தானே.

சிறப்புப்பாயிர முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்—ருo.

## திருநாட்டுப்படலம்.

பிறங்கருள்வடிவமானபெரியநாயகியாரோடு
மறங்கிளர்செம்பொன்மாரிபொழிந்தவரமர்ந்துமேவு
நிறங்குலாங்கண்டதேவிமுதற்பலநெருங்கக்கொண்ட
திறங்கமழ்பாண்டிநாட்டின்வளஞ்சிலசெப்பலுற்றாம். (௧)

வான்றவழிமயமென்னமாலயற்கரியனாய
தேன்றவழ்கடுக்கைவேணிச்செம்மலைமருகாப்பெற்ற
மீன்றவழ்துவசத்தண்ணல்விளங்குவெண்குடைநன்னீழ
லூன்றவழ்நரப்பொலிந்துதழைவதுபாண்டிநாடு. (௨)

திருந்துபல்லுயிர்க்குஞ்செம்பொற்றிருவடிநீழனல்கும்
பெருந்தகைவழுதியீன்றபேரெழிலணங்கைவேட்டுப்
பொருந்துபொன்முடிகவித்துப்பொலிகுடைநீழல்செய்ய
வருந்தவம்புரிந்ததம்மாவணிகெழுபாண்டிநாடு. (௩)

உமைநிகர்சிறப்புவாய்ந்தவுலோபாமுத்திரையோடன்பி
னமைசிவபெருமானன்னவகத்தியமுனிவர்கோமான்
கமைமிகுதமிழ்விரித்துக்கவினவீற்றிருக்குந்தெய்வச்
சிமையமால்வரையுடைத்தத்திருத்தகுபாண்டிநாடு. (௪)

பெரும்பொருள்வெறுப்பத்தோற்றும்பெற்றியான்மற்றைநாடும்
விரும்புறத்தக்கதாகிமெலிதராவிளையுளுரு
மரும்புபல்செல்வர்சான்றோரமைதரவுடையதாகி
யிரும்புகழ்படைத்துமேவுமேற்றஞ்சால்பாண்டிநாடு. (௫)

புனைபிருதுவிமுனைந்தாம்பூதகாரியமேயென்று
நினைதருபுவனமோம்பநிலவுமப்பூதமைந்து
ளினைதலிலொன்றுதெவ்வவெண்ணியப்புகழ்சால்பூதந்
தனைநிகருருவக்கொண்டுதழைவிசும்பாறுசென்று. (௬)

பொழிபுனன்மிகவும்வேண்டும்புகழ்ப்பணைக்காவல்பூண்ட
வழிமதுக்கற்பமாலைவானவன்றிசையிற்புக்குக்
கழிபுனல்வெறுப்பவுண்டுகளைந்தவைம்பூதந்தம்மு
ளழிவுசெயொன்றைநட்டாங்கதனுருக்கொண்டுமீண்டு. (௭)

நாட்டுமைம்பூதந்தம்முணடுநிலைப்பூதமாயும்
வாட்டுவெங்கோடையோடுமருவியெவ்வுயிருந்திய
மூட்டுதல்கருத்துட்கொண்டெழுதுசினங்கொடுமுழங்கிப்
பூட்டுதல்செய்யாச்சாபம்பொருக்கெனவொன்றுவாங்கி, (௮)

அளவருந்தீட்டாவம்புமலங்குமின்னெனும்பல்வாளும்
பளகரும்வலியிற்றுங்கிப்பரவிடங்கொடுக்குமாற்ற
லுளவொருபூதமாயவாகவப்பூமியுற்று
வளனமைமற்றோர்பூதமருவுவெப்பொழிந்ததென்ன. (௯)

திசைபுகழ்ந்தேத்துங்கண்டதேவியின்மருதநீழ
லசைவறவமர்ந்தவெங்கள்சிறையிலியண்ணன்முன்னம்
வசைதவிராசற்காகப்பொழிந்தபொன்மாரிபோல
விசைநிமிர்ந்தெழுச்சிமேவப்பொழிந்தனவெங்குமாதே. (௧௦)

புலவர்கள்பெருமான்முன்னம்பொழிந்தபொன்மாரியாலே
நலவர்கள்புகழ்காங்கேயன்வெங்கலிநசித்தாற்போல
வலவர்களுவக்குங்கொண்மூவளவறப்பொழிந்தநீராற்
குலவர்கணெருங்கும்பார்வெங்கோடைபோயொழிந்ததன்றே. (௧௧)

சிறையிலிநாதர்பெய்தசெம்பொன்மாமழையாலன்று
தறையகத்துள்ளவாயசிலவுயிர்தழைத்தவின்று
குறையறவாரியுண்டுகுயின்பொழிமழையினாலே
நிறைபலவுயிர்களெல்லாந்தழைத்தனநிரம்பிமண்மேல். (௧௨)

நிறத்துமின்னுடையதாகிக்கறுத்தமானேயம்பூண்டே
யறத்தினாலுலகமோம்புமென்பதையறையக்கேட்டோ
நிறத்துமின்னுடையதாகிக்கறுத்தமானேயம்பூண்டே
யறத்தினாலுலகமோம்புமென்பதையமையக்கண்டோம். (௧௩)

வான்றவழ்பொதியக்குன்றமழைபொழிபெருநீரொங்குந்
தான்றவழ்கின்றதோற்றஞ்சந்தனஞ்செறியக்குன்ற
மான்றவெங்கோடைமாயவடர்ந்துமிக்கெழுகார்கால
மீன்றதண்குளிர்க்குடைந்துவெண்படாம்போர்த்ததேய்க்கும். (௧௪)

வளையகங்காந்தட்டடம்வயக்கினகவிகைகானத்
தளையகமாம்பியோம்பித்தழைந்தனநாளையோடை
நிளையகம்பீலியூதிநிளைத்தனநெய்தல்பூத்த
திளையகம்பவளமுத்தஞ்சிந்தினமுகிற்புத்தேட்கே. (௧௫)

தலைமிசைவீழ்ந்தநன்னீரடியுறத்தள்ளிமீட்டுந்
தலைமிசைக்கொள்ளாக்குன்றந்தையருவியினகைக்குந்
தலைமிசைவீழ்ந்தநன்னீரடியுறத்தள்ளிமீட்டுந்
தலைமிசைக்கொள்ளும்பல்பாதவஞ்செறிகானமாதோ. (௧௬)

உண்டதுபோகவெஞ்சியுள்ளதைப்புறத்துவீசுந்
தண்டருச்செறிந்தகானந்தளவினுணகையாநிற்கு
முண்டதுபோகவெஞ்சியுள்ளதைப்புறம்போக்காது
கண்டலில்சிறையினுக்குந்தடம்பணைவைப்பைமாதோ. (௧௭)

மழைபொழிநன்னீர்முற்றுஞ்சுவைகெடாவண்ணந்தேக்கி
விழைதரவுதவும்பண்ணைகாரையான்மிகநகைக்கு
மழைபொழிநன்னீர்முற்றுஞ்சுவைகெடும்வண்ணந்தேக்கி
விழைதரப்படாதாச்செய்யும்வீணாயைநோக்கிமாதோ. (கஅ)

வெள்ளியமேகம்பச்சைவீணாநீர்மடுத்துத்தர்மு
கள்ளியபசுமையந்தமேகநன்னீர்மடுத்துத்
துள்ளியவேனிலாலேவெள்ளெனுந்தோற்றமுற்ற
வொள்ளியபுவியும்புல்லாற்பசந்ததாலொருங்குமாதோ. (கசு)

முன்றனையுண்டதின்னுமயர்த்திடாமுகில்களெல்லா
நன்றனைபாண்டிநாட்டிற்பொழிவளநவில்வார்யாரோ
யென்றனையோங்கலாதியிருந்திணையைந்துண்முன்னங்
குன்றனைவளந்தொகுத்துக்கூறுதலுற்றுஞ்சில்ல. (௨0)

குறிஞ்சி.

வேறு.

அமரமான்மியமுள்ளதென்றறிஞரோயறையுந்
தமரமோங்கிடப்பெருவளநனிகொடுதழையும்
பமரமார்தொடைப்பசுவருக்கத்தகப்படாத
குமரவேளினிதிருந்தரசாட்சிசெய்குறிஞ்சி. (உக)

கிளக்குந்தெய்வமான்மியமுடைத்தாதலிற்கிரிக
ளளக்கலாவளவரும்பொருள்வறப்பினுமளித்த
றுளக்கலாநிலைதோற்றமுற்கொடுகலைத்தொகைகள்
விளக்குமாரியர்க்கொப்பெனவிளங்குவமாதோ (உஉ)

கருங்குடாவடியிறவுளர்காய்கணைக்கஞ்சி
மருங்கொர்கந்தரம்புக்கதுமற்றதுகதிர்கண்
டொருங்குவெந்தழல்பொழிதரவுள்ளலைந்துயங்கு
முருங்குதுன்பமெவ்விடஞ்சென்றுமுருக்கிடாரொத்தே. (உங)

வட்டமாகியபளிக்கறைநடுவொருவழுவை
யிட்டமேவுறத்துயிறல்கண்டிறவுளர்மடவார்
பட்டநீரலாற்கறைமதிப்பிரதிவிம்பந்தா
முட்டவானுயர்வரையகமுகிழ்க்குமோவென்பார். (உச)

தலைவரில்வழிமாரவேட்குறுசரந்தந்து
மலையுமாசெயலென்னெனமங்கையருதைப்ப
வுலைவில்பூப்பலமீளவுநல்குமொண்செயலை
நிலையதங்குணம்வருத்தினுநீக்குறார்நிகரும். (உரு)

விளவுதாழ்வரைச்சாரல்வாய்விழைபிடிவாய்த்தே
னளவிருல்பறித்தூட்டுமால்களிறதுகண்
டுளவுபாதியினறுமுறுத்துறவிழிசிவப்பார்
களவுமேற்கொடாவயிற்பயில்காளையரம்மா. (உசு)

காந்தண்மெல்லரும்புடைதரக்கண்டமாமஞ்ஞை
பாந்தள்பைத்ததுபணமெனப்படர்ந்தெதிர்கொத்தி
யேய்ந்தநாணமுற்றுள்ளவாறரவெதிர்வரினு
மாய்ந்தசிந்தையினையமுற்றுழிதருமம்மா. (உஎ)

மறந்தவாவிழிமங்கையர்புணர்ச்சியைமதித்துச்
சிறந்தவாடவர்நள்ளிருட்குறியிடைச்செலும்போ
துறந்தசெம்மணிவிளக்கெடுத்திடையிடையுதவ
நிறந்தவாவரவீன்றிடுநெடுவெணாச்சாரல். (உஅ)

அறையிடைத்தினைக்குரல்பலபரப்பியிட்டவைமேற்
கறையடிச்சிறுகன்றுகள்சுழன்றிடக்கண்டு
பிறைமருப்புலக்கையினூறற்குழியவைபெய்து
குறையறுத்தவைத்தளாவியின்றேன்கொள்வார்பலரும். (உகூ)

ஐயவற்புதக்குமரவேள்வள்ளியோடமரச்
செய்யமாதவமுஞற்றியசிலம்புயர்சீர்மை
யெய்யவல்லவர்யாவரோபலவளமியைந்து
பெய்யவல்லகானத்திறஞ்சிறிதுபேசுவோம். (௩0)

முல்லை.

பராவுகற்பொருமடந்தைபாற்பாற்றியதோட
மராவுமாறுளங்குறித்தளவிறந்தகற்பாகி
விராவுமேன்மையிற்பொலிதரவிருத்திசெய்தென்று
முராரிவாழ்வதற்கிடமெனத்திகழ்வதுமுல்லை. (௩க)

எவ்விடங்களும்பசுந்துழாய்க்குலஞ்செறிந்திடலால்
வெவ்விடங்கொள்கட்பிருந்தையைப்புணர்சுகம்விராவ
வவ்விடங்குடிகொண்டனனலங்குநான்முகத்துக்
கவ்விடங்கொளப்பூத்தவோருந்தியங்கடவுள். (௩உ)

என்றுமால்சிவபத்தரிற்சிறந்தவனென்ப
தோன்றும்வாய்மையேகூவிளங்குருந்தொளிர்தூர்வை
கொன்றையானைந்துமல்கியவிடங்குடிகொண்டான்
பொன்றுமாறிலாப்பூசனைபுரிதரற்பொருட்டே. (௩௩)

ஒன்றுமுல்லையுந்தெய்வதபூமியென்றுணாத்தற்
கென்றுமோரிடையூறிலையேதுவென்னென்னிற்
றுன்றுதேவெலாமுறுப்புறச்சுமந்தபல்பசுவு
மன்றவண்டரும்வைகலேசாலுமால்மதியீர். (௩௪)

தூயவேய்ங்குழலோசையுந்தொகுநிரைக்கழுத்தின்
மேயமாமணியோசையுமேகம்வாய்விடுக்கும்
பாயவோசையுந்தனித்துறைபாவையருவப்பா
ராயநாயகர்தேர்வருமோசைகேட்டம்மா (௩௫)

வளர்த்தகாந்தனித்தமர்வுழிமாரவேளெய்து
தளர்த்தவீசுவீரரும்பெனத்தையலார்நகைக்க
விளர்த்தமுல்லைகண்மீளவும்வீசுவவரும்பு
கிளர்த்தமாதரார்கிளர்நகைக்கெதிர்நகைத்தென்ன. (௩௬)

மலர்ந்தபூம்புனமுருக்குகள்சூழ்ந்தனமருவ
வலர்ந்தபூவைகளதனடுப்பொலிதருங்காட்சி
கலந்தசெந்தழற்கோட்டையுள்வானவன்முற்கணையும்
வலந்தவாவிறற்முனவருறைவதுமானும். (௩௭)

பூத்துநின்றிபலர்சுரஞ்சிவபிரான்புனையு
மேத்துகார்புறஞ்சூழ்ந்ததுகரியதளியையும்
வார்த்தசெய்யதேனத்தகுதோனின்றுவழியு
மார்த்தபுண்ணிழிநீரெனலாம்வனத்தம்மா. (௩௮)

வரகுஞ்சாமையுமவரையுந்துவரையுமலிந்து
விரவும்பல்வளமேதகப்பொலிவனவொருபாற்
பரவுதீஞ்சுவைப்பாறயிர்மோர்பசர்வெண்ணெ
யுரவுவாசநெயிவ்வளம்பொலிவனவொருபால். (௩௯)

கன்றுமாக்களுஞ்சேக்களும்பொலிபெருங்கானத்
தொன்றுமேன்மையையென்னுரைசெய்தனமுலவா
தென்றுநீர்வளமலிந்துகண்கவர்பொழிலியைந்து
துன்றுமேன்மைசான்மருதத்தின்வளஞ்சிலசொல்வாம். (௪௦)

மருதம்.

தருவுந்தேனுவுஞ்சங்கமும்பதுமமுமணியும்
வெருவும்வாள்வலித்தேவருமிபெணிவிரும்பத்
திருவுநேர்கலாச்சசிமுலைச்சுவடெயர்திணிதோண்
மருவுமிந்திரன்காவலிற்பொலிவதுமருதம். (௪௧)

மருதமென்பதுந்தெய்வமான்மியமுளதென்று
கருதவோரிடையூறிலைகமழ்சுராபான
மொருவுறுதுசெய்வார்களங்குறைதலுமரம்பை
வெருவுறுதமர்நீர்மையுமேநகுசான்றும். (௪௨)

கொங்குதங்கியசந்தமுங்காரகிற்குறடுந்
தங்குமால்கரிக்கோடுமாமயிற்பெருந்தழையு
மெங்குமாகவெள்வயிரஞ்செம்மணிபலவெடுத்துப்
பொங்குவெண்டிரைகொழித்துலாய்வரும்பெரும்பொருனை (௪௩)

வலியவச்சிரமேந்திவெள்வாரணமூர்ந்து
பொலியநன்கரம்பைகட்டிஇத்தானத்திற்பொருந்தி
யொலியகற்பகக்கானளாயுறுதலிற்பொருனை
வலியவாம்கழற்காலுடையிந்திரனடுக்கும். (௪௪)

ஓதிமஞ்செலுத்திடுதலாலொளிகெழுபணில
மாதியேந்துபுபூமணந்திடுதலாலலவன்
சோதிமாமணியரவஞ்சார்வேணிசூழ்தரலா
னிதிமூவருநிகர்ப்பதுநெடும்புனற்பொருனே. (சரு)

அன்றுதாகநோயொருகுறட்ணிந்திடவார்த்து
வென்றுவந்ததுபற்பலதாகநோய்வீட்ட
வின்றுவந்ததோவென்றிடமிகப்பெருக்கெடுத்து
நன்றுபொங்கியார்த்தெழுந்ததுநலமலிவைவை. (சசு)

போந்துமேகம்வாய்மடுத்தொழித்திடுமெனல்பொய்யே
யேந்துமிந்நதிமடுத்துவரொழித்தநீரெடுத்து
மாந்துவிண்ணினிதாப்பெய்யுமெனவராவளர்கண்
மோந்துபொங்கியார்த்தெழுவதுமுதுமதுநதியே. (சஎ)

வாரியேழுமொன்ருயினுமதித்திட்ப்படுமோ
ரோரிபோல்வதோவெனப்புகல்பற்பலவேரி
மூரிசீர்கடைபோகவுமுதுகளையலைத்து
மாரியாரினுமருதருள்வாமெனமலிந்த. (சஅ)

மொழிபல்லேரியினதிகளின்புனன்முதுமதகின்
வழிபுகுந்துபோய்வயலெலாம்புகுந்தனமருத
பழிவிளைத்திடுமலமறப்பத்திசெய்தொழுகு
மிழிவிலாரிட்த்தெம்பிரானருள்புகுந்தென்ன. (சகு)

திரைபரந்தெழுதீம்புனல்வயருறும்புகுத
நரைபரந்தெழுகட்புனனுளையவாய்ப்புகுத்தி
வரைபரந்தெழுதோளுடைமள்ளருண்மகிழ்ந்து
விரைபரந்தெழுபூம்பணைபுகுந்தனர்விரைந்தே. (ருo)

பிறங்குமாயவன்மனைவிதன்பேருட்லிளப்ப
நிறங்குலாமவனெருபவத்துருபடையிறுத்தி
மறங்குலாவுதென்றிசையினனூர்திவன்பிடரி
னறங்குலாநுகம்பிணைத்தனர்மேழிகையணைத்தார். (ருக)

வலக்கையுட்குறுமுட்டலைக்கோலொன்றுவாங்கி
விலக்கருங்கடுப்பமைதரவிளாப்பலகோலி
நலக்குறும்படைச்சால்செறிதாநகுபலவு
முலக்கவன்பகரெப்பினருழுதனர்மாதோ. (ருஉ)

முன்னநம்முருக்கொண்டவன்முருக்குவெம்படையே
யன்னவன்றிருமனையொடுநம்மையுமடர்ப்ப
தென்னறிந்திலமெனச்சிலமீனெழீஇத்துள்ளும்
பன்னருந்துயருற்றுளித்திடும்பலகூர்மம். (ருங)

காக்குமாந்தர்பாலிரவலர்முகமெனக்கவிழ்ந்த
புரக்குமாயவன்கண்ணினும்பொலிபலகமலம்
பரக்குமின்னனவிங்ஙனமாகவும்பாரார்
தரக்குமஞ்சியவலியினாலுழுதொழில்சமைந்தார். (௫௪)

வடக்கிருந்துதென்றிசைசெலநடத்தியும்வயங்கு
குடக்கிருந்துகீழ்த்திசைசெலநடத்தியுங்குளிர்செ
யடக்குபுன்முதலியாவையுமழிந்துசேறாகிக்
கிடக்கும்வண்ணமேயுழுதனர்கெழுவலிமள்ளர். (௫௫)

செறுவின்சேறுறவரம்புருக்குலைந்ததுதேர்ந்து
மறுவில்செய்ப்புகழ்நமக்குறுதெனமறுப்பார்போற்
பெறுவலத்துயர்மள்ளர்கள்பேணுகங்கரிந்து
கொறுகொறுத்துஞெண்டுழன்றிடக்குலையுயர்த்தினால் (௫௬)

ஓதுவேதியர்முதலியோர்நடுநிலையுறுதற்
கேதுவாஞ்செறுநடுநிலையெனுஞ்சமமெய்தத்
தீதுதீர்பரம்பேறுபுமள்ளர்தாஞ்செலுத்தக்
கோதுதீர்படிமக்கலம்போற்சமங்கொண்ட. (௫௭)

மேகவாகனனாகியவேந்தனைத்தொழுது
பாகமார்தரச்சமைந்தநென்முளைகள்பற்பலவும்
வேகமாய்விதைத்துறவழிநாட்புனல்வீழ்த்திக்
காகமாதிகளுறாவகையோப்பினர்களமர். (௫௮)

வெள்ளியங்குரித்தெனப்பொலிமுளையெலாம்விழைநீ
ரள்ளியுண்டுயர்மரகதமங்குரித்தென்னப்
புள்ளிதீர்பசப்புற்றதுபொற்புறத்தளிர்த்தாங்
கொள்ளிதாலெனத்தளிர்த்தனபெரும்பணையொருங்கு. (௫௯)

உற்றகேவலத்துயிர்களைப்புவனங்களொருங்கு
பற்றவுற்றதோர்பருவத்துவிடுபராபரன்போ
லற்றமற்றபைம்பயிர்களைப்பருவநன்கறிந்து
கொற்றமள்ளர்கள்கொண்டுபோய்வயனாறுநடுவார். (௬௰)

நட்டபைம்பயிர்நன்னிலந்தாழ்ந்தெழுநயமே
யொட்டுமுன்புதாழ்ந்தெழுந்துபின்வளர்வழியூறு
வட்டவாய்மலர்தாமரைகுமுதங்கண்மலிந்த
பட்டவாயிரங்குணங்களும்பாற்றுலோபம்போல். (௬௧)

எறிதருங்களையெறிதரும்பருவமீதென்று
செறிதரும்புயவலியுடைக்களமர்கள்செப்பக்
குறிதருங்கருங்கயல்விழியுழத்தியர்குழுமி
மறிதரும்புனல்வயலிடையனமெனப்புகுந்தார். (௬௨)

அங்கண்மேவியவுழத்தியராளவையோராம்ப
லங்கண்வாங்கயல்வெண்டரங்கங்களையாம்ப
லங்கண்ணெண்டுநோற்காவிலோர்கானடையாம்ப
லங்கண்மாரிகைபொழிதரக்களைவதுமாம்பல். (௬௩)

கண்ணுமாற்றுக்காலாட்டியர்கொங்கைகோகனகங்
கண்ணுமற்றவர்குழல்பொழிமதவுங்கோகனகங்
கண்ணும்வான்மெய்யினொளியுமற்றையகோகனகங்
கண்ணுமாதெனத்தடிவதுமதுப்பெய்கோகனகம். (௬௪)

வாயுறைப்பதுவள்ளைகைதடிவதும்வள்ளை
யாயகையணிகுவளையழிப்பனகுவளை
யோயமாய்ப்பதுசைவலமிசைவலமுடைய
பாயமென்பணையகம்புகூஉத்தொழில்செய்பாவையரோ. (௬௫)

இன்னவாறுபல்களைகளைந்தெழுதலுமுலோப்
மென்னவோதுதலொழிதரக்குணந்தடித்தென்னப்
பன்னவாம்பயிர்முழுமையுந்தடித்துறப்பணைத்துப்
பின்னர்வான்கதிரீன்றனபேருலகுவப்ப. (௬௬)

உம்பல்வாய்கிழித்தெழுமருப்பெனக்கதிரொருங்கு
நம்புபைம்பயிர்மடல்கிழித்தெழுந்துநன்மதியம்
பம்பவாக்கியகிரணத்தாலினியபால்பற்றி
யம்பர்முற்றுறவிளைந்துசாய்ந்தனபணையகத்து. (௬௭)

பிறையுருப்புனையிரும்புகைக்கொடுபெருங்களமர்
முறையறுத்தவைமுழுமையும்வரிந்திருங்களத்து
நிறைதலைச்சுமையாக்கொடுசென்றுபோய்நிரப்பிச்
சிறைகுலைத்துமேற்கடாம்பலமிதித்திடச்செய்வார். (௬௮)

சங்கநின்றும்வெண்டரளம்வேறெடுத்தெனவைநின்
றங்களத்தடுசெந்நெல்வேறெடுத்தினிதாகத்
துங்கமார்தருவளியெதிர்தூற்றினர்குவித்தார்
சிங்கலில்லதோர்காலெடுத்தளந்தனர்சிறப்ப. (௬௯)

இறைவன்பாகமுமேனையர்க்கீவதுமீந்து
குறையிலெஞ்சியயாவையுங்கொண்டுபோய்மனைவாய்
நிறையவிட்டுவைத்தைம்புலத்தாற்றையுநிலைசெய்
மிறையிலாக்குடியெங்கணுநிறைந்துளமேன்மேல். (௭௰)

கரும்புமஞ்சளுமிஞ்சியுந்தெங்குமொண்கமுகும்
விரும்புமேனவும்பொலிதருமருதத்தின்மேன்மை
யரும்பும்வாஞ்சையிற்சிறிதுரைத்தனஞ்சிறிதறைவார்ஞ்
சுரும்புசூழ்தருநெய்தல்சார்தொகேடல்வளமும், (௭௧)

நெய்தல்.

வேறு.

வருணன்காவலின்வயங்குநெய்தல்வாய்ப்
பொருநணன்கீட்டியபோகுதோணியு
மருவிவல்விளைஇவருபொற்றோணியு
மொருவுறாதொன்றோடொன்றுமுட்டுமே. (௭௨)

மிக்ககைதையும்விரவுஞாழலுந்
தொக்கபுன்னையுந்தோட்டுநெய்தலு
மொக்கவீசுதோறுற்றவாசனை
புக்குலாவலிற்புலவுமாறுமே. (௭௩)

கொடியிடைப்பரத்தியர்குழற்கணி
நெடியதாழைவாசனைநிரம்பலாற்
படியின்மற்றவர்பகர்புலாற்கயல்
கடியமீனெனக்களித்துக்கொள்வரால். (௭௪)

உப்புமீனமுமொன்றுபட்டிட்
வப்புநீர்மையினமைத்துணக்குவார்
தப்புறாதுபுள்சாயச்சாடுவார்
பப்புவாள்விழிப்பரத்திமார்களே. (௭௫)

வலையிழுப்பவர்வயக்குமோதையு
முலைதரத்திமிலுந்துமோதையும்
விலைபடுத்துமீன்விற்குமோதையு
மலைகடற்கெதிராய்முழங்குமே. (௭௬)

வேறு.

பரவுவாரிசூழ்நிலப்பெருவளமெவர்பகர்வார்
குரவுநெல்லியுமிருப்பையுங்கோங்கமுங்கொண்டு
விரவுநண்புடன்போக்கினர்விரும்புமாறேன்ற
புரவுசெய்திடுபாலையும்பொலியுமாங்காங்கு. (௭௭)

திணைமயக்கம்.

வளையகம்பொலிகளிறுகைநீட்டிவன்கானத்
தளையகம்பொலியிறுங்குகொள்வதுமொருசாராம்
விளையகம்பொலிகான்குயின்மென்பணையோடைட்
நிளையகம்பொலிமாந்துணர்கோதலுநிகழும். (௭௮)

பணைவிராவியவயலைபோய்ப்புன்னைமேற்படரப்
பெணைவிராவியகடற்றுகிர்வஞ்சிமேற்பிறங்கு
மணைவிராவியசங்கினுன்பாலொடுதேனு
மிணைவிராவியமாங்கனிச்சாறும்வீழ்ந்திளையும். (௭௯)

இன்னவாயவைந்திணைவளப்பாண்டிநாட்டியல்பைப்
பன்னசேடனும்பகாமுற்றாதெனப்பகர்வா
னென்னின்யாமெவன்சொற்றனநகரங்களெவைக்கு
முன்னிலாவியகண்டதேவிப்புகழ்மொழிவாம். (௮௰)

திருநாட்டுப்படல முற்றிற்று.

ஆ படலம் - ௨ - க்கு. திருவிருத்தம்.—௧௪௰.

# திருநகரப்படலம்.

அண்டருமுனிவருமவாவிச்சூழ்வது
தண்டருமறம்பொருளின்பஞ்சார்ந்தவர்க்
கெண்டரும்படியளித்தெச்சமெய்தவுங்
கண்டருமான்மியக்கண்டதேவியே. (க)

பூமருவுயிர்த்தெழுபுவனம்போர்க்குங்கா
வாமருவுலகேழுமங்கைகூப்பிடப்
பாமருபுண்ணியம்பலவுமாக்கிடுங்
காமருவளத்ததுகண்டதேவியே. (உ)

ஏற்றமார்தனைக்குறித்தெவருமாதவ
மாற்றவாழம்மையேயடைந்துமாதவம்
போற்றவாந்தலமெனிற்புரைவதில்லைதோங்
காற்றவாமான்மியக்கண்டதேவியே. (ங)

சிறைவலிக்கழுகொன்றுதேடிக்காணுரு
நறைமலர்த்திருமுடிநயந்துகண்டொரு
குறையுடைக்கழுகருள்கூடச்செய்தது
கறையறப்பொலிவளக்கண்டதேவியே. (ச)

பண்ணியமாதவப்பண்பினோர்க்கலா
லண்ணியவேனையோர்க்கமைதராததா
லெண்ணியயாவையுமெளிதினல்கிடுங்
கண்ணியபெருவளக்கண்டதேவியே. (ரு)

புறநகர்.

கருங்கடலுவர்ப்பெர்டுபுலவுங்காற்றுவா
னெருங்குமுற்றுறவனைந்துறத்துதித்தெனப்
பெருங்குரற்புட்களின்பெருமுழக்கொடு
மருங்குறச்சூழ்தரும்பசியவான்பொழில். (சு)

அக்கருங்கடலகத்தளாந்துகிர்க்கொடி
யிக்கருஞ்சோலைவாயிளையமாதரா
ரக்கருங்கடலகத்தலங்குநித்தில
மிக்கருஞ்சோலையுளிலங்கரும்பரோர். (எ)

அனையபைங்கடலகத்தாயநுண்மண
லினையபைஞ்சோலைவாயியைந்தபூம்பொடி
யனையபைங்கடலலையெழுந்தவெள்வளை
யினையபைம்பொழின்மிசையிலங்குவெண்பிறை. (அ)

தலம்புகுநல்லவர்தங்களுக்கிரு
நலம்புகுமன்னவைநல்குமாதரார்
குலம்புகுமாதனங்குழுமியென்னநீர்
நிலம்புகுமோரிருநிறத்தசஞ்சமும். (கூ)

ஐயநீர்ப்பெருந்தடம்யாககுண்டமாஞ்
செய்யதாமரையழல்செறியுங்காரளி
வெய்யவாம்புகையழல்வளர்க்கும்வேதியர்
மையறீர்சுற்றெலாம்வயங்குமன்னமே. (க0)

வானவர்சூழ்தலினவர்மரீஇயமர்
தானமென்றறிதரத்தக்கபன்மல
ரானவைசெறியவண்டளிகண்மொய்த்திட
வீனமினந்தனஞ்சூழுமெங்குமே. (கக)

ஒன்றுநந்தனவனத்தொருங்குகாரளி
சென்றுசென்றுழக்குவபகைவர்சேரிட
மென்றுகண்டசுரர்களெய்திநாடொறு
மன்றுதல்புரிந்தளாயடர்த்தன்மானுமே. (கஉ)

ஒருகழுகினுக்கருளுதவிக்காத்தவன்
றிருநகராதலிற்சேர்ந்தியாமெலா
மருவிடினமக்குமின்னருள்வழங்குமென்
றுருவில்பைம்பொழிலுள்வீயொருங்குவைகுமே. (கங)

நன்மலர்செறிதருநந்தனந்தொறு
மின்மலர்செருந்திகள்வீயுகுப்பன
வன்மலர்கள்த்தினனருளின்முன்னைநாட்
பொன்மழைபொழிந்தனைப்புதுக்கினாலென. (கச)

தம்முருவெடுத்தவன்றனதுவெம்பகைக்
கம்மவீதினமெனவறிந்தடர்த்தல்போற்
செம்மலிதளிர்பலசெறிந்தமாவெலாங்
கொம்மெனமிதித்தளாய்க்குயிலுலாவுமே. (கரு)

கதிர்படுசெந்நென்மென்காற்றினாலசைந்
ததிர்வருகரும்படியறைந்துகீறலா
லெதிரறப்பொழிந்தசாறெழுந்துபோயயற்
பிதிர்வறவரம்பைகள்வளர்க்கும்பேணியே (கசா)

நம்மையூருமையயற்றலத்துநன்புலஞ்
செம்மையிற்காத்தலிற்றெவ்வலாமென
வம்மதண்பணைதொறுமளாவிநெற்கெதிர்
கொம்மெனப்பசுங்கிளிக்குலங்கொண்டேகுமே. (கஎ)

பித்தருமிகழ்தராப்பெரியநாயகி
கைத்தலமமர்தலிற்காமர்கிள்ளைக
ளத்தலத்தெதுகவர்ந்தேகுமாயினுஞ்
சித்தமிக்குவப்பரந்நகரஞ்சேர்ந்துளார். (கஅ)

மருவலர்முடித்தலைதெங்கங்காயின்வைத்
தொருவறமிதித்தலினுறுசெந்நீரினாற்
கருவுரனிகர்த்தலாற்கறையடிப்பெய
ரிருபொருள்படப்புனைவழுவையெண்ணில. (கசு)

உருமுறழ்முழக்கினவூழித்தீயென
வெருவருந்திறலினவீசுவாலின
பொருபிறைக்கோட்டினபுலிங்கக்கண்ணின
வருகளிறுகள்செறிகூடமல்குவ. (உ0)

விழைமதகளிறுகண்மிக்குலாவுவ
தழைதருங்கிழிட்ந்தயங்குமேலிட
மழைமதச்சுரகரிமகிழ்ந்துலாவுவ
பிழைதபுவாரிகள்பிறங்குமெங்குமே. (உக)

ஒன்னலர்மணிமுடியுருளத்தாவுவ
பன்னருமனத்தினும்பகர்கடுப்பின
வென்னருநெடுக்கெய்துந்தோற்றத்த
பொன்னணிமணிவயப்புரவியெண்ணில. (உஉ)

குலமகளெனத்தலைகவிழுங்கொள்கையி
ணிலகுவெம்பரிசெறியிலாயமீமிசை
யுலவுதல்வழக்கெனவுவந்துலாவுறு
மலருமப்பெயர்புனைவானமீனரோ. (உங)

ஆருறுகுடத்தினவம்பொற்சுற்றின
பாருறுவன்மையைப்பகிர்ந்துசெல்வன
காருறுவிண்ணையுங்கலக்குஞ்சென்னிய
தேருறுமிருக்கைகள்சிவணும்பற்பல. (உச)

அடித்தலந்தேர்பலவமைத்தகூடத்து
முடித்தலந்தவழுதன்முறைமையாமெனத்
தடித்தலமரவொளிர்பரிதிசாலுந்தேர்
நொடித்தலங்கூர்ந்துசெனோக்கமிக்கதே. (உரு)

வாளொடுபரிசையும்வயக்குங்கையினர்
தாளொடுகூடியகழலர்தாங்கிய
கோளொடுகூற்றொடுமலைக்குங்கொள்கையர்
வேளொடுநிகர்த்தமாவீரரெண்ணிலர். (உசு)

தெள்ளியவிஞ்சையர்வியக்குஞ்சீர்த்திய
ரெள்ளியபுறக்கொடையென்றுமில்லவர்
நள்ளியவினைத்திறநாளுநாடியாற்
றெள்ளியதாயகல்லூரியும்பல. (உஎ)

அன்றுவெங்கரிபரியாதிபோலநா
மென்றுங்கீழ்நோக்குதலில்லையாலெனு
நன்றுமேனோக்குபுநடக்குமொட்டகங்
கன்றுறுதமர்தருங்கைப்பவாவியே. (உஅ)

கரிபரிதேர்க்குறுகருவியோடுகோல்
வரிகழல்வீரர்கள்வயக்குமேதிகள்
புரிநர்பல்வளத்தொடுபொலியுஞ்சேரியுந்
தெரிதரினளப்பிலசிறந்தவாவயின். (உகூ)

அறநகரெனப்புகலனையமாநகர்ப்
புறநகர்வளஞ்சிலபுகன்றுளாமினி
திறநகர்பலவுமுள்ளுவக்குஞ்சிரிடைத்
திறநகர்வளஞ்சிலசெப்புவாமரோ. (௩0)

இ டை ந க ர்.

வேறு.

வாவியோரடைமலர்ந்தவுய்யானமு
மாவியன்னவணங்கனையாரொடு
மேவிமைந்தர்விராவுசெய்குன்றமு
மோவியம்புனைமாடமுமோங்குவ. (௩க)

குழல்கையேந்திக்குறுந்தொடியார்களுங்
கழலினுடவருங்கலந்தாடுவா
ரொழுகுநீர்களிறும்பிடியும்விராய்
முழுகுசீர்கைமுகந்திறைத்தாடல்போல். (௩உ)

இம்மையேமறுமைப்பயனெய்துதல்
செம்மைசாலித்தலத்தின்சிறப்பென
வம்மையூர்மனைமேற்பயிலங்கலார்
கொம்மைவான்றருவின்கனிகூட்டுண்பார். (௩௩)

ஒண்ணிலாநுதலாரொளிர்மாட்மேல்
வெண்ணிலாமுற்றத்தாட்விழுமலர்
கண்ணிலாங்குப்பைசாற்றவுங்கற்பக
மெண்ணிலாமலர்க்குப்பையிறைக்குமே. (௩௪)

மாடமேனிலைமண்ணுந்தொழிலினர்
பாடமைந்தகளிப்புறப்பான்மதி
கூடவாங்குக்குலவுமக்கல்லற
னீடவாக்கிநிலவுறமண்ணுமே. (௩௫)

புதுமணத்தமர்பூவையர்நாளுமு
மதுமலர்ப்பந்தின்வண்சுடர்மாற்றலு
முதமணிக்கலமொய்யொளிவீசலா
லெதுவினிச்செயலென்றுகண்பொத்துவார். (௩௬)

தோன்றுமாட்மிசைத்தொடிக்கையினர்
சான்றவெம்முலைசார்ந்துபவனத்து
ளான்றவொன்றடுப்பக்கண்டவாடவர்
மூன்றுகொங்கைமுகிழ்த்தமையென்னென்பார். (௩௭)

மன்னுமேனிலைமாட்டத்தின்மூடிய
மின்னனார்முத்தமாலைகைவீசுபோ
தன்னமாலைசிதறிவிண்ணாழ்ந்தன
வின்னுமோதுவர்தாரகையென்னவே. (௩௮)

நன்றுநுங்கணலியுமருங்குல்வின்
ணென்றும்வெல்லுமிரண்டுகும்பங்கொளா
வொன்றுகொண்டநலிவில்விண்ணெறப்புவ
தன்றுகாணென்றுவப்பிப்பராட்டவர், (௩௯)

வளியுலாமதருடுதன்மாண்கர
மொளிநிலாவுறப்போக்குதலொண்மல
ரளிநிலாங்குழலார்முகத்தாரொழில்
களிநிலாவக்கவர்வதற்கன்றுகொல். (௪௦)

மேகந்தாழ்நிவந்தவெண்மாட்மேற்
போகுசூலம்பொலிவுற்றுத்தோன்றிடு
மாகர்போற்றவயங்குகயிலைமே
லேகபாதவுருத்திரனின்றென. (௪௧)

மாண்டசெம்பொன்வயங்குசெய்குன்றினைக்
காண்டகுங்கருமேகம்வளைத்திடல்
பூண்டவந்நிறத்தொருபுண்ணிய
னீண்டயானைத்தோல்போர்த்தனிகர்க்குமே. (௪௨)

உள்ளெலாம்வயிரத்தொளியோங்கிட
வெள்ளிநீலம்வெளிவைத்திழைத்தலி
லுள்ளுசத்துவமுட்புறந்தாமதங்
கொள்ளுங்கோலவுருத்திரன்போலுமே. (௪௩)

நீலவம்மனைக்கொடுநேரிழைக்
கோலமங்கையராட்கொழுநர்தா
மாலநின்றமனத்தொடுதாமணைப்
பாலவீழ்வண்டுபெற்பலவென்பரால், (௪௪)

ஊசலாடுவரொள்ளிழைமாதரார்
கார்சுலாமவர்காதிற்குழையொடு
மாசிலாதவலியுடையாடவர்
நேசமார்மனமுந்நெகிழ்ந்தாடுமால். (௪௫)

கொந்துவார்குழற்கோதையர்மேற்றுகில்
சந்துவாண்முலைநீங்கத்தவாதுபொற்
பந்தடிப்பர்பகைச்குத்தெரிவித்தே
யுந்துதண்டமவைக்குறுப்பாமென. (சசு)

உன்னுதம்மொழியொப்புமைநோக்கல்போன்
மன்னுமாளிகைமீமிசைமாதர்ார்
பன்னும்யாழ்கொடுபாடுவர்விஞ்சையர்
துன்னும்வாஞ்சையிற்கேட்டுத்துணிவரோ. (சஎ)

ஊடலோதையுமூட்டுணர்த்துபு
கூடலோதையுங்கோலத்திவவுயாழ்
பாடலோதையும்பாடற்சதிதழீஇ
யாடலோதையுமல்குவவாயிடை. (சஅ)

பூவுஞ்சுண்ணமுஞ்சாந்தும்பொரியும்விண்
மேவுமுத்தமும்வெள்வயிரங்களும்
பாவுசெம்மணியும்பலவாயமற்
றியாவுங்குப்பையிடைநகர்வீதியே. (சகூ)

அளவிலாவளமாயவிடைநக
ரளவிலாச்சிறப்பாருறைசெய்பவ
ரளவிலாப்பல்குடியமையுண்ணக
ரளவிலாச்சிறப்பிற்சற்றறைகுவாம். (ருௗ)

உண்ணகர்.

வேறு.

மடல்விழ்துளப்த்தண்டார்மாயவனுயமீனம்
படலரும்வலிசார்கூர்மங்கலக்கிடப்பட்டாததாய
கடல்சொலிவ்வசழியென்றுகருதிடப்பாந்துநீண்டு
தொடலரிதென்னவாழ்ந்துசூழ்ந்ததுகிடங்குமாதோ. (ருக)

வெள்ளியதரளமொண்பூவிளைகுளிர்புறத்தும்வெம்மை
நள்ளியவன்மீனுதியகத்துங்கொணகுகிடங்கு
வள்ளிவபுறத்துச்செம்மையகத்துவன்கொடுமைபூண்ட்
தெள்ளியவிலைமின்னரொத்திருப்பதுதெரியுங்காலே. (ருஉ)

அன்றுலகளந்தமாயோன்வளர்ந்ததிவ்வளவையென்ன
நன்றுலகறியத்தேற்றித்தானவர்நடுங்கச்சூழ்ந்து
சென்றுபோர்மலையாவண்ணந்தேவர்வாழ்நகருங்காத்துப்
பொன்றுதலறநிற்கும்பாம்புரிவலையகப்பாமாதோ. (ருங)

பொறிபலவடக்கலானுஞ்சலிப்பறுபொலிவினானும்
பறிநிகர்வேணியெங்கள்பரனையுட்கோடலானு
மறிவருமுயர்ச்சியானும்பகையறவயங்கலானு
முறிவருந்தவத்தின்மேலாமுனிவரும்போலுமொச்சி. (ருச)

சாற்றுயிர்க்குறிகைகொண்டெட்டல்பற்குறியணைத்தல்
போற்றுநல்லமுதுதுய்த்தன்முதற்புறக்கரணமோடு
மாற்றகக்கரணமாயகரிகரமாதியாவுந்
தோற்றுவபரத்தைமாதர்சுடர்மனைப்புறத்திலோவம். (௫௫)

பன்னரும்வனப்பினானும்பயின்றபல்விஞ்சையானு
நன்னலக்கண்டதேவிநகரமர்கணிகைமாதர்
பொன்னமர்திருவைவேதன்புணர்மடமாதைவென்று
ரன்னவரற்றைநாடொட்டலர்மடந்தையரானாரே. (௫௬)

சுவைநனியுடையவூனும்பிறர்விழிசிறிதுதொட்டா
னவைமிகுமெச்சிலென்றேகழிக்குநன்மறையோர்தாமு
மவையகம்புகுதுநல்லார்பலர்நுகரதரவூறல்
செவையெனக்கொள்வார்தெய்வவவியெனத்தெளிந்தார்போலும். (௫௭)

அந்தணராதிநால்வரனுலோமராதியாக
வந்தவர்யாவரேனுமருமலின்பளிக்குநீராற்
சந்தணிகுவவுக்கொங்கைத்தாழ்குழற்பரத்தைமாதர்
செந்துவர்ச்சடிலமோலிச்சிவபிரான்றானேதேறும். (௫௮)

கணிகையர்சிறந்தோரொன்றுகணாவதற்கையமின்று
மணிகெழுகூந்தலாதிமாந்தளிரடியீறாக
வணிகெழுமைந்தர்தம்மைமயக்குமற்றணையார்நல்கு
பணியுடைகளுமயக்குமவர்மயங்காதபண்பால். (௫௯)

உருவுடைமைந்தர்யாருமுறுபெருவிரத்தியாரிற்
பருவநன்மனைவியாதிப்பலவையும்வெறுத்துமிக்க
பொருண்முதலனைத்துநல்கிப்பணிகளும்புரிவர்ஞானக்
குருவெனக்கொண்டார்போலுமவர்திறங்கூறற்பாற்றே. (௬0)

விருந்துவந்துண்டாலன்றிமென்மலராதிகொண்டு
திருந்துசுத்திகளோரைந்திற்சிவார்ச்சனைசெய்தாலன்றி
வருந்துதீர்த்திரப்போருள்ளமகிழ்ச்சிசெய்திட்டாலன்றி
யருந்துதல்செய்யார்சாவாவமுதமும்வேளாண்மாக்கள். (௬௧)

ஒழுக்கமன்பருளாசாரமுறவுபசாரமுற்று
விழுக்குடிப்பிறப்பையோம்பிமேவபிமானம்பூண்டு
மழுக்கலில்சிறப்பில்வாழும்வண்மைசால்வேளாண்மாக்கள்
செழுக்குடிக்கிரகமேயதிருமறுகணிவிண்போலாம். (௬௨)

மழைகருக்கொண்டதெண்ணீர்முழுவதுமாநீர்ஞாலத்
துழையுறவிழுதலன்றிவிண்முதலுறுமைபோலத்
தழைதருபுவியினுயதவாப்பொருளெலாமந்நாய்கர்
விழைதருமாடமன்றிவேறிடம்புகுதாவென்றும். (௬௩)

புலியதளுடுத்துவானும்பொலந்தருநல்கவாங்கி
மெலிவறவுடுத்துவாருமன்றிவேறிடத்துள்ளாரு
ளொலிபுகழ்க்கண்டதேவிநகருறைவணிகமாக்கண்
மலிநியமத்துளாடைவாங்குவான்புகாரும்யாரே. (௬௪)

மலைவருவணிகமாக்கண்மருவியநியமமெல்லா
முலைவருகளங்கநீக்கியுவாமதியினைச்சேருக்கி
நிலையுறப்பூசியன்னசுண்ணவெண்ணிகழ்ச்சியாலே
கலைமகளெனலாம்பற்பல்கலையமைந்திருத்தல்சான்றே. (௬௫)

கோடுதலின்றிக்கோடிகோடியாக்கொடுக்கவல்லார்
நாடுயரவரோயன்றிஞாலத்துமற்றையார்கா
ணீடுறக்கொள்வானெண்ணியெத்தனைபேர்வந்தாலுங்
கூடுகைசலிப்புறாதுகொடுத்திடுவிரதம்பூண்டார். (௬௬)

நென்முதலொருபாலாகுநேத்திரமொருபாலாகும்
பன்மணியொருபாலாகும்பரவுபொன்வெள்ளிசெய்பூ
ணென்னவுமொருபாலாகுமிருங்கலையொருபாலாகு
மன்னவர்நியமம்பொற்கோனருங்கருவூலம்போலும். (௬௭)

வருந்தியெவ்விடத்துஞ்சென்றுமாண்பெர்ருளீட்டல்போலத்
திருந்தியவன்னதானஞ்சிவாலயப்பணிமுன்னுன
பொருந்தியபலவுஞ்செய்துபுண்ணியப்பொருளுமீட்டிப்
பெருந்திருவேற்றோர்க்கீய்ந்துபெரும்புகழ்ப்பொருளுங்கொள்வார். (௬௮)

கரப்பினெஞ்சுடையாராகிக்கடனறிவாருமாய்ச்சீர்
பரப்புமவ்வணிகராஞேர்பாவிரவாருமில்லை
நிரப்புமற்றவனாக்கண்டநேயத்தோரூருமில்லை
யிரப்புமற்றவராஞருளுமிழிவினையடைந்ததில்லை. (௬௯)

வெள்ளியநீறுபூசிவிளங்குகண்மணிகள்பூண்டு
தெள்ளியவெழுத்தைந்தெண்ணிச்சிவார்ச்சனைவிருப்பினுற்றித்
தள்ளியவினைஞராகித்தழைந்துவாழ்வணிகமாக்க
ளொள்ளியமாடவீதியுரைத்திடமுற்றுங்கொல்லே. (௭0)

வருபரிதாரங்காட்டமதமலைமசாங்காட்டத்
திருவளர்கொடிஞ்சிப்பொற்றேர்செறிதருநாவாய்காட்டப்
பொருபடைக்கலமீன்காட்டப்பொருனர்மீனெறிவார்காட்டக்
கருநிறக்கடலேமானுங்காவலர்மாடவீதி. (௭௧)

மருவலர்தருமண்கொண்டவானகமவர்க்குநல்கிப்
பெருமையிலிழிந்ததேற்றுப்பிறங்கிமிக்குயர்ந்ததாய
பொருவருமின்பால்கும்புண்ணியப்பிரானையொத்த
திருவளர்மன்னர்வாழுந்தெருவளஞ்சொல்லப்போமோ. (௭௨)

பசுவுடம்பழித்துமுக்கட்பதியுடம்போம்பிக்கொள்வார்
வசுவளர்த்ததனுட்சொன்னவள்ளலைத்தரிசிப்பார்பன்
முசுவுகள்சோலைதோறுமொய்த்தவானவனைக்கூவி
யுசுவினூண்மகத்தினூட்டுமொண்மையர்வீதியோர்பால். (எ௩)

காலையின்முழுகியாப்பிகைக்கொடுபவித்திரஞ்செய்
மாலையினட்டில்புக்குமடையமைத்தேந்தியுச்சி
வேலையினதிதியர்க்குவிருப்புடனூட்டுமெஞ்சொற்
சோலையிற்கிளியன்னாராற்றுலங்குவமறையோரில்லம். (எ௪)

எண்ணில்வேதாகமங்களையமெய்தாமையாய்ந்து
மண்ணிலான்மார்த்தத்தோடுபரார்த்தமும்வயங்கப்பூசித்
தொண்ணிதியருட்பேறெய்தியொழிந்தமும்மலத்தினராம்
புண்ணியவாதிசைவர்பொலிதிருமறுகுமோர்பால். (எ௫)

எழுமதமழகுபத்துங்குற்றமீரைந்தும்போகத்
தழுவியொண்கருத்துமுன்னுச்சாற்றியவைந்தனுலுங்
கெழுதகுபிறவாற்றாலுங்கிளரியலுணாக்கவல்ல
முழுதுணர்புல்வர்மேயகழகமுமுகிழ்க்குமோர்பால். (எ௬)

புண்ணியமறையோராதியாவரும்புகுந்துமேலோர்
கண்ணியவுமையோர்பாகக்கண்ணுதற்பெருமான்பொற்று
ணண்ணியவின்பேயென்றுநயப்புறவின்பமேன்மேற்
பண்ணியதாயதண்ணீர்ப்பந்தரும்பொலியுமோர்பால். (எஎ)

வேதியராதியோர்கள்விலாப்புடைவீங்கவுண்பான்
கோதியலாதவல்சிகுய்கமழ்கருணைபாகு
மோதியசுவையநெய்பான்முதலியபலவுநல்குந்
தீதியலாதசெல்வத்திருமடங்களுமுண்டோர்பால். (எஅ)

குலவியதெய்வஞானக்குரவனாரருளினாலே
நிலவியசமயமாதிநிகழொருமூன்றும்பெற்றுக்
கலவியபாசமைந்துங்கழிதரவொன்றியொன்று
றுலவியலாதவின்பமுறுநர்வாழ்மடமுமோர்பால். (எ௯)

இன்னப்பன்மறுகுஞ்சூழவெறிகதிர்மதாணிநாப்பண்
மின்னவிர்மணியேபோலவிளக்கமிக்கமைந்துமேவும்
பின்னமில்கருணைத்தாயாம்பெரியநாயகியோடெங்கண்
முன்னவன்மருதவாணன்முனிவறப்பொலியுங்கோயில். (அ0)

உருத்திரப்பெருமான்றீர்த்தமுலகளந்தவன்செய்தீர்த்தந்
திருத்தகுபிரமதீர்த்தஞ்செறிபுகழ்ச்சடாயுதீர்த்த
மருத்தபன்மலரும்பூத்துவாசமெண்சாதம்வீசிக்
கருத்தமைகோயில்சூழ்ந்துகவின்கொடுபொலியாநிற்கும். (அ௧)

திரிபுரமெரித்தஞான்றுசேணுலகனைத்துந்தாங்கப்
பரிபுரம்புலம்பும்பூந்தாட்பணையொருபாகத்தண்ண
றெரிபுரம்பொலியுமேருவேறென்றுசெறித்ததென்ன
வரிபுரந்தரன்முன்னோரடைபொற்கோபுரநின்றன்றே. (௮௨)

பகைத்தமும்மதிலுநீறுபட்டமையுணர்ந்துதீயா
நகைத்தவனருள்கொள்பாக்குநயந்துயமொன்றுமேவி
யுகைத்தவெஞ்சினத்துத்தீயருருவகையொதுக்கிச்சூழ்ந்து
தகைத்ததுநிற்றல்போலுந்தவாச்சுடர்ச்செம்பொனிஞ்சி. (௮௩)

ஒருமதிலின்னதாகவொருமதிலுணர்ந்துவல்லே
தருமவெள்விடையினார்க்குத்தவாநிழனுளுஞ்செய்ய
மருமலர்த்தருவொன்றாகிநிழல்செய்துவயங்கிற்றென்னப்
பொருவில்வெண்மருதநாளும்பூத்துறத்தழையாநிற்கும். (௮௪)

மற்றுமோர்மதிலும்போந்துமண்டபமாதியாய
முற்றுமாய்ப்பொலிந்ததென்னமொய்த்தகால்பத்துநூறு
பற்றுமண்டபமுன்யாவும்பாரிடைக்கருங்கற்போழ்ந்து
செற்றுநன்கமைத்தலாலேகருங்கதிர்திகழவீசும். (௮௫)

தனைத்தவர்செய்தஞான்றுதனக்கெதிர்முளைத்ததோர்ந்து
நினைத்தபொன்மேருவள்ளனிறையருணிரப்பிக்கொள்ள
முளைத்தப்பல்விமானமாகிமுகிழ்த்ததென்றெவரும்பேச
வினைத்தெனவறிதராப்பொன்விமானங்களெங்குமோங்கும். (௮௬)

கூண்டவன்புடையதாயகுட்டிமமுன்றிலெங்கு
நீண்டவன்முதல்வானோருநிறைபெரும்புவியுளாரு
மாண்டவன்புடையராகிவந்துபொன்மாரிதூர்ப்பா
ராண்டவன்பொழிந்தவாறேயடியரும்பொழிவாரென்ன. (௮௭)

மழைநிசர்களத்துப்பெம்மான்வண்மைசால்திருமுன்னாகத்
தழைமலர்சிறிதுமின்றிப்பிறதழைமலரோசார
வுழையமாமசையுமின்றியொருதருநின்றுசூழ்வோர்
விழைதருபலன்களெல்லாங்கொடுத்திடுமேலுமேலும். (௮௮)

அரகரமுழக்குநால்வரருட்டிருப்பாடலார்ப்பு
முரசதிரொலியும்வீணைமுழவெழுமிசைப்புமம்மான்
பரவுசந்நிதிமுன்னாகப்பணிந்தெழுமடியார்பாவ
வுரவுவெங்களிறுமாய்க்குமரிமுழக்கொத்திசைக்கும். (௮௯)

கண்ணலங்கனிந்தவன்பிற்கடவுளோர்முதலோரீண்டி
யெண்ணலங்கனிந்தவெல்லாமெய்தியின்படையநல்கிப்
பெண்ணலங்கனிந்ததெய்வப்பொருட்பெரியாளோடு
மண்ணலங்கனிந்தமேனியமலனக்கோயின்மேவும். (௯௰)

திருநகரப்படலம் முற்றிற்று.

---

௮ படலம் ௩--க்கு. திருவிருத்தம்.—௨௦௦.

# நைமிசப்படலம்.

திருப்பொருந்தலாற்சலதரமூர்தலாற்சிமை
விருப்பொருங்குறத்தழுவலால்விண்ணவர்விழையுந்
திருப்பொருந்தலாற்கண்மலராயிரஞ்செறிந்த
வுருப்பொருந்தலானைமிசமிந்திரனொக்கும். (க)

மலரணங்குறத்தழுவலான்மருவுநால்வாயா
லலர்மிசைப்பொலிமாண்பினான்மண்ணளித்தலினா
னலர்விரும்புபல்கலைப்பொலிவுடைமையானாரு
முலர்தராதநைமிசவனம்விதியையுமொக்கும். (உ)

உற்றதானவர்தமையொழித்தமரணாயூட்டக்
கற்றமேன்மையாற்பூமணம்பொருந்தலாற்கருங்கார்
செற்றமேனிவந்தமைதலாலளிவளர்திறத்தாற்
கொற்றநேமியங்கடவுளும்போலுமக்குளிர்கான். (ங)

பிறையுங்கங்கையுமீமிசைத்தவழ்தலாற்பிறங்கி
நிறையும்பல்சடையுடைமையானிலவுபூங்கொன்றை
நறைமணத்தலாற்கூவிளநயத்தலானாளுங்
குறைவிலாச்சிவபரனையுமானுமக்குளிர்கான். (ச)

இருந்துவானவர்முனிவரர்மொய்த்தலாற்செவ்வே
யிருந்துநன்னலமெய்தினர்க்களித்தலாலால
மருந்துசெய்தவனமர்தலாற்சலிப்பரும்வலியாற்
பொருந்துவெள்ளியங்கயிலையும்போலுமக்கானம். (ரு)

மோகமாதிகளொழிந்தவம்முழுத்தவவனத்து
யாகசாலையினெழும்புகையெங்கணுந்தழாவி
மேகமார்தருவெளியிடைப்படிதலாலன்றோ
மாகமார்நிறம்புகைநிறமென்பர்மண்ணுலகோர். (சு)

ஓங்குநைமிசத்துளுற்றிடுமகத்தழற்கொழுந்து
வீங்குபொன்னுலகுருக்குமென்றஞ்சியேவிண்ணோர்
தேங்குகங்கையுமங்குலுங்கீழுறச்செய்தா
ராங்குநின்றிவணுறுவதுங்குளிரவாயன்றோ. (எ)

மேயபற்பலதருக்களினின்றுமேலிடத்துப்
போயபல்விடபங்களின்மலர்தொறும்புகுந்து
பாயவண்டுகளுகுத்தசெந்தாதுவீழ்பண்பாற்
றேயமோதும்விண்ணுலகுசெந்தாதுலகென்றே. (அ)

விண்ணளாவியமகத்தழற்கொழுந்துமேலெழுந்து
கண்ணளாவியமரமுதற்கணாதருக்கொழுந்து
மெண்ணளாவியவேற்றுமைதெரிவரிதென்றுந்
தண்ணளாவியதண்மையும்வெப்பமுந்தவிர்ந்து. (கூ)

அண்டவாணர்தம்பசிதவிர்த்தருளுமத்தானம்
புண்டரீகமுமாம்பலும்புரிமகப்பொருட்டி
னண்டுகூர்மமும்பறவையுமளப்பரிதாய
வண்டுமொய்த்தலின்வனமெனற்கொத்ததுமாதோ. (௧௦)

வேறு.

இன்னபல்வளத்தனைமிசவனத்திலிருப்பவர்விதிவிலக்கமைதி
சொன்னமெய்ப்பொருணூலாகியமறையுந்துளக்கமிலங்கமோராறும்
பன்னரும்புகழ்சாலாகமத்திரளும்பகர்தருமற்றுளவெவையு
நன்னயம்பயப்பப்பாலுணுங்குருகினவையொருமூன்றுமற்றுணர்ந்தார். (௧௧)

கொடுமருத்தெழுந்துநெடுவரைபிடுங்கிக்குவலயநடுங்கவீசிடினும்
படுதிரைக்கடலோரேழுமொன்றாகிப்பரந்துமேற்பொங்கினுங்கொண்மூ
வடுதிறற்பெருந்தீயுருமுவீழ்த்திடினுமணுத்துணையஞருமுட்கொளார்வெங்
கடுமிடற்றமைத்தகண்ணுதற்பெருமான்கழல்கழலாதுள்வைத்திருப்பார். (௧௨)

வானமர்நறவுக்கற்பகநீழல்வாழ்பவன்றோற்றமுமிறப்பும்
கானமர்கமலமலர்மிசைப்பொலியுங்கடவுடன்றோற்றமுமிறப்பு
மூனமர்திகிரிவலனெடுத்துவணமுயர்த்தவன்றோற்றமுமிறப்புந்
தானமர்காலமெனப்பலகண்டார்தவாதினும்பற்பலகாண்பார். (௧௩)

இருவினைப்பயனென்றுரைசெயப்பட்டவின்பமுந்துன்பமுமெய்தி
னுருவினைவிடாமுன்னமைந்தனவேயென்றுவப்புறார்முனிநாரென்றுங்
கருவினையொழிக்குஞ்செயல்செயலன்றிக்கருதுறார்பிறநகையிடத்தும்
வருவினையருளினிரிதரக்காண்பார்மாசறுகாட்சியிற்பொலிவார். (௧௪)

என்னபல்பிறப்புந்துயரமேவிளைக்குமித்தகுபிறப்பறற்குபாயம்
பன்னருமறையீறளப்பரும்பெருமான்பாதங்காணுதலதற்குபாய
மன்னவன்விபூதிகண்மணிபுனைந்தோணாந்தெழுத்தெண்ணியாங்சர்ங்கு
மன்னவீற்றிருக்குந்தலப்புகழ்கேட்டுமெனங்கொளலென்றுளந்துணிந்தார். (௧௫)

மொழிதருதவத்துச்சவுநகமுனிவன்முதற்பலமுனிவரர்குழுமி
வழிதருமதுப்பூங்கொன்றையானுவக்குமாமகம்பன்னிரண்டாண்டிற்
கழிதருமொன்றுபுரிந்தனரதனைக்காணியநீற்றொடுபரமன்
விழிதருமணிபூண்முனிவரர்பலருமேவினாரம்முனிவரருள். (௧௬)

செங்கதிரகத்துப்பொலிந்ததென்றுரைத்தல்செய்யமெய்ஞ்ஞானமும்புறத்துத்
தங்கவெண்மதியம்போர்த்ததென்றுரைப்பத்தவலரும்விபூதியுமுடையோன்
பங்கமில்பரமன்விழிமணிபூண்டுபரவெழுத்தைந்துமுட்கணித்துத்
துங்கமாணவர்தங்குழாம்புடைசூழச்சுதமாமுனிவனும்வந்தான். (௧௭)

வந்தமாமுனியையிருந்தமாமுனிவர்மகிழ்ந்தெதிர்சென்றடிபணிந்து
சந்தமாரிருக்கையழகுறவிட்டுத்தனித்தநன்மேலுறவிருத்திக்
கந்தமாமலர்முற்கொண்டருச்சித்துக்கவின்றபாத்தியமுதலளித்துத்
தந்தமாதரவிற்பணிந்தனரிருந்தார்சவுனகமுனிவரனுரைப்பான். (௧௮)

மறைமுழு துணர்ந்துவகுத்துபகரித்தவா தராயணமுனிவரன்பாற்
குறையறவுணர்ந்தவருட்பெருங்கடலேகோதிலாக்குணப்பெருங்குன்றே
துறைபலதெரிக்கும்புராணமுற்றளந்துதொகைவகைவிரியினிற்றெரித்து
மிறைதபுத்தருளுங்கற்பகதருவேவிமலவாழ்வேயெனத்துதித்து. (௰௯)

துன்னியகருணைச்சிவபிரானுவக்கத்தொடங்கினமொருமகமுடிப்பான்
மன்னியவதுபோதனையனேயிரங்கிவந்தெனவந்தனையொருநீ
முன்னியநினதுதரிசனமதனுன்முடிந்ததித்தினஞ்சுபதினமாய்
நன்னியமத்தோனானுமற்றியாருநன்மகமிம்மகமன்றே. (௨௰)

ஓரிடந்தலமற்றோரிடந்தீர்த்தமோரிடமூர்த்திசீர்சூழ்ந்த
பாரிடமதனிற்சிறந்ததாயிருக்கும்பகர்ந்தவோர்மூன்றன்மான்மியமு
மோரிடஞ்சிறந்தேயிருப்பதெத்தானமுணர்க்கினுங்கேட்கினும்விழைவு
பாரிடங்குனிப்பக்குனிக்குநம்பரமன்பரிந்தருள்செய்வதெத்தானம். (௨௧)

எத்தலநினையிற்றருமமாமதனேடெத்தலமுணர்க்கினன்பொருளா
மெத்தலங்காணினின்பமாமவையோடெத்தலம்வசிக்கின்வீடாகு
மெத்தலமனுதிமுத்தனெம்பெருமானிடையறாதிருப்பதுமற்று
மெத்தலமயன்மாலாதியர்போற்றியிறைஞ்சிடவெற்றைக்கும்பொலியும். (௨௨)

இத்தனைவளங்கண்முழுவதுமமைந்தவிருந்தலமொன்றுநீநவின்று
லத்தனையனையாயுய்குவமறைந்ததகலிடத்துண்டுகொலிலைகொன்
முத்தனையவதுநன்கிருந்திடுமேன்மொழிந்தவெம்பாக்கியமாமாற்
சித்தனையாதுதெளிதரவுணர்த்திதேசிகோத்தமத்தவவென்றான். (௨௩)

தவத்துயர்பெருமைச்சவுநகமுனிவன்றன்மொழியகஞ்செவியேற்றுச்
சிவத்துயர்கருணைச்சூதமாமுனிவன்செம்மனத்துவகையனுகிப்
பவத்துயரகற்றுமிதுப்பகரென்றபடிநனிநன்றுநன்றந்தோ
வவத்துயரிதுபோற்களைவதுபிறிதின்றகலிடத்தென்றுரைசெய்வான். (௨௪)

நெடியமாதவத்துச்சவுநகமுனிவநீவினவியதுலகோம்பும்
படியதாயெவர்க்கும்பேருபகாரப்பண்பதாய்நின்றதுகண்டாய்
கொடியதாகியநஞ்சமுதுசெய்தருளாற்குவலயம்புரந்தநம்பெருமா
னடியவாயடைதற்குபாயமீதன்றியாய்தரினும்பிறிதிலையே. (௨௫)

விழைவினிவினயப்படியெலாம்பொருந்திமேவுமோர்தலமுமுண்டதன்வாய்க்
கழைகுலாஞ்சிலையோற்காய்ந்தவர்தமக்குக்கயிலையாதிகளினும்பிரியந்
தழைதருமனையதலமிதுகாறுஞ்சாற்றியதிலையொருவருக்குங்
குழைதருமனத்தினிவினவியதாற்கூறுதுமனையமந்தணமே. (௨௬)

மிகுபுகழ்படைத்ததமிழ்வளநாட்டுண்மேதகுபாண்டியநாட்டிற்
றகுபெருந்துறைக்குச்சற்றுமேற்றிசையிற்சாற்றுறும்யோசனையொன்றி
னகுபொழிற்கானப்பேருக்கீசானநற்றிசையோசனையொன்றி
னுகுதலில்சாலிவாடியூர்க்கழலோனுறுதிசையோசனையணாயில். (௨௭)

ஒருதிருப்புத்தூர்க்குற்றகீழ்த்திசையினென்றனாயோசனையளவிற்
பொருவருபுனவாயிலுச்கியைமருத்துப்புணர்திசையோசனையொன்றிற்
றருவடர்பொழிலாடானைக்குவடபாற்றழைதிசையோசனையொன்றில்
வெருவருவீரைவனத்திற்குத்தென்பால்விராந்திசையோசனையொன்றில். (உஅ)

மதுநதிவிரிசன்மாநதிமுறையேவடக்கினுந்தெற்கினுமொழுகப்
புதுமதிமுடித்தான்றனக்கிடமாகிப்பொலிதருமொருதலமதன்பேர்
முதுதவமருதவனமெனமொழிவர்முனைந்தொருமருதமர்திறத்தா
லிதுவலாற்கண்டதேவியென்றொருபேரெய்தியதின்னமும்பலவால். (உகூ)

போற்றியநாமகாரணம்பின்னர்ப்புலப்படுமித்தலமேன்மை
யூற்றியலமைந்தசுவையுடைக்காந்தத்துருத்திரசங்கிதையுணாக்குந்
தேற்றியகானப்பேர்ப்புராணத்துஞ்செப்பியதுண்டிவையனைத்து
மாற்றியதவத்தோய்கேண்மதியுணாப்பாமற்புதம்பயப்பதென்றறிமோ. (௩0)

செறியொருமுகூர்த்தமெண்ணியுமிதன்மேற்சிறந்ததாயொருதலமுணரே
மறிவுருவனையதலமகத்துவத்திற்காகரமாயதுமற்று
முறிவினுற்பொருளுஞ்சேய்த்திருந்தகத்துமுன்னினுங்கொடுப்பதுகண்டாய்
குறிகெழுமனையதலத்துமான்மியமுற்கூறுதுந்தொகுத்துளங்கோடி. (௩௧)

ஊழியுஞ்சலியாக்கயிலையங்கிரியினும்பர்தம்பிரான்றிருமுகக்கண்
வீழியங்கனிவாய்வெண்ணகையுமையாண்மென்கரங்கொடுபுதைத்ததுவும்
வாழியவனையானேவலிற்சழுவாய்வயக்கிடவுலகமுற்றுயிர்த்தாள்
பூழியர்நாட்டினருச்சுனவனத்துப்புகுந்துமாதவம்புரிந்ததுவும். (௩௨)

வலிகெழுசண்டன்கொடுந்தொழிற்கஞ்சிமாலயன்முதலியோர்கயிலை
யொலிகெழுகழற்கார்சிவபிரானைவவொருங்குவந்தளவிலாவளமை
பொலிகெழுமருதவனத்திடைப்புகுந்துபூரணிதன்னைக்கண்டதுவுங்
கலிகெழுசண்டாசுரனுயிரவியக்காளியைத்தோற்றுவித்ததுவும். (௩௩)

தேவியைமருதவனத்தமர்பெருமான்றிருக்கலியாணஞ்செய்ததுவுங்
காவியங்களத்தோனருடலைக்கொண்டுகெருதுருத்திரப்பெருமானு
மேவியமனையாளுற்றமாமார்பத்தொருவனுங்கலைமகடவனும்
வாவிமூன்றுங்குத்தனித்தனியகழ்ந்துவரமலிபூசைசெய்ததுவும். (௩௪)

நிறைபுகழ்க்கதிருமதியுமாங்கெய்திநெடுந்தடந்தனித்தனிதொட்டுக்
குறையறப்போற்றிப்பூசைசெய்ததுவுங்கொடியவாளரக்கனோடமர்த்துச்
சிறையிலியாயசடாயுபூசித்துத்திருத்தகுமுத்தியெய்தியது
மறைவிதிப்படிகாங்கேயனோர்தீர்த்தம்வகுத்துறப்பூசித்தவாறும். (௩௫)

மற்றவன்பொருட்டுமருதமர்நிழல்வாழ்வள்ளல்பொன்மழைபொழிந்ததுவுங்
கொற்றவெஞ்சிலைமான்றனைவதைத்ததுவுங்குளிர்சிவகங்கையின்சிறப்பு
மற்றமிறலத்துப்பெருமையும்புகழ்சாலத்தலமான்மியமென்று
கற்றவர்புகழுஞ்சூதமாமுனிவன்கனிவொடுதொகுத்தினிதுணாத்தான். (௩௬)

மன்னியதவத்துச்சவுநகமுனிவன்மற்றதுகேட்டுளமகிழ்ந்து
மின்னியபுகழோய்தொகுத்துரைத்ததனைவிரித்துரைத்தருளியென்றிரப்பத்
துன்னியவுவப்பிற்சூதமாமுனியுஞ்சொற்றனனதனைமாதவத்தோர்
பன்னியதமிழான்மொழிபெயர்த்தெடுத்துப்பாடுவான்றுணிந்தனனுய்ந்தேன். ()

நைமிசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் - ச-க்கு - திருவிருத்தம்—உ௱எ.

---

## திருக்கண்புதைத்தபடலம்.

வண்டுதுற்றதாமரைமலர்மிசையமர்மறையோன்
றண்டுசக்கரம்வளைசிலைவாள்கொள்கைத்தலத்தோ
னண்டுவெண்பதத்தோற்றமுமிறுதியுமனந்தங்
கண்டுநிற்பதுகண்ணுதல்வெள்ளியங்கயிலை. (க)

அரவுகான்றசெம்மணிபலமேற்பொதிந்தலங்கப்
பரவுமேன்மையிற்பொலிவரைபரம்பரனுதற்க
ணுரவுசால்விழிச்செந்தழற்கொழுந்தகத்தொருதான்
விரவுதன்மையைத்தெரித்ததுபோன்மெனவிளங்கும். (உ)

அகத்துவைகியசெந்தழல்புறஞ்சுலாயழற்ற
மிகத்தழங்குபாற்புணரிமேற்பொங்கினுலொக்கு
நகத்தழைந்தசெந்தளிர்ப்பொழில்சூழ்விராய்நண்ண
மகத்துவம்பொலிந்தோங்கியவன்னமால்வரையே. (ங)

மருவுபாற்கடல்பொங்கிமேலெழுதரமாலு
மொருவுருதுமீமிசைக்கிடந்துறங்குவதேய்ப்பப்
பொருவிலாதுயர்ந்தோங்கியவத்தகுபொருப்பின்
றிருவுலாஞ்சிகரத்துமாலுறங்குவசெறிந்தே. (ச)

அடிவரைத்தலைமடங்கல்சூழ்கந்தரமணையா
முடிவிலாவருவித்திரளாரமாமோலி
நெடியநாயகன்கோயிலாகிறைமதிகுடையாப்
படியிலாவரசிருக்குமத்தகுபருப்பதமே. (ரு)

எய்துமானிறக்கறுப்பன்றிக்கறுப்புவேறில்லை
யைதயன்மார்நடுத்தளர்வன்றித்தளர்வுவேறில்லை
வெய்யதங்கணனுதல்விழியன்றிவேறில்லை
யையபாதவவஞ்சமன்றில்லைமற்றுங்கே. (சு)

பற்றுபேரிருண்முழுமையுமழிதரப்பருகிச்
சுற்றுமேயசெம்மணிநடுச்சுடர்ப்பெருங்கற்றை
செற்றுமால்வரைத்தோற்றமொண்செந்தழனுப்பண்
மற்றுவெண்ணிறப்புனலெழுந்தமைவதுவயக்கும். (எ)

மிக்கபேரொளியவ்வரைவீற்றிருந்தருளத்
தக்கவாதனமாகியதன்மைசேர்ந்தன்றே
மைக்கண்மெல்லியறழுவிடக்குழைந்தமெய்வானோன்
கைக்கும்வில்லெனக்குழைந்ததோர்காமருபொருப்பு. (அ)

நறியபைம்பொழிலவ்வரைத்தியானஞ்செய்நலத்தாற்
குறியமாமுனியொருகரமமைத்தலுங்கோள்செ
னெறியபாவமாயினதெனுங்கவலைநீத்தவப்ப
வறியயாவருமமுழ்ந்தியதொருவரையிலத்தே. (௯)

இறைவன்மேனியுமேனியிற்பூதியுமேற்ற
பிறையுந்தும்பையுமருக்கமுமனவும்பேணிறகு
நிறையுமேறுமால்யானையும்வெள்ளெனநிலாவி
யுறையுமவ்வரையுறுசுடர்மூழ்கலானன்றே. (௧0)

அன்னமால்வரைதனைத்தொழுவலிகுறித்தன்றே
மின்னவாவியமார்புடைவித்தகனொருகை
முன்னமோர்வரையெடுத்திடமெலியதாமுடிந்து
நன்னர்வான்குடையாயதுநானிலம்வியப்ப. (௧௧)

அயனையோர்மலர்சுமக்குமற்றரியைநீர்சுமக்கும்
வியனிலாவுமிவ்வேதுவான்மெல்லியரவரோ
பயனிலாவுமிம்மால்வரைசுமத்தலிற்பரனே
சயநிலாம்வலியோனெனிற்சாற்றுவதென்னே, (௧௨)

வானநாடவர்சூட்டியபொன்னரிமாலைக்
கானமெங்கணுங்கிடப்பனகழித்திடவீழ்ந்து
பேனவார்திரைப்பாற்கடற்பெருக்கமேற்பிறங்கி
யானபற்பலாயிரந்துகிர்க்கொடிப்படர்வனைய. (௧௩)

பொலங்கொள்கற்பகப்புதுமணம்போர்த்தியபுரமு
நலங்கொள்சுத்தியவுலகமும்வைகுந்தநகரு
நிலங்கொளவ்வரைச்கடிமையாய்நிகழ்தலினன்றே
வலங்கொளப்பொலிதாலுடன்மாறுமாறுநினே. (௧௪)

உல்குபற்றுயிர்சரியையாதியவொருமூன்று
மிலகுபொற்புறப்புரிதலவ்வரைகுறித்தென்னி
லல்குமுற்றுருவத்தருமால்வரைப்பெருமை
பலகுறித்துளத்தெண்ணினும்பாடமுற்றுவதோ. (௧௫)

வேறு.

அன்னமால்வரைமேலாயிரங்கோடியவிரிளங்கதிரொருங்குதித்தா
லன்னமாமதில்கோபுரங்கருக்கிரகமத்தமாமண்டபம்விமான
மன்னமாகடையாராட்டரங்கர்தியாடகப்பசும்பொனுன்மணியா
னன்னகாவண்ணமமைத்ததம்மனையோட்ங்கணரினிதமர்கோயில், (௧௬)

அணையவான்றளியுளாயிரங்கரமுமாயிரங்கால்களாநிறுவிப்
புணையவாங்கதிரோமேற்பரப்பாகப்பொருந்தியதென்னுமண்டபமோன்
றெணையநாவலரும்புகழமுற்ருறதிலங்குமம்மண்டபநாப்பண்
விணையம்வாய்ந்தவருமிற்றெனப்படாதமிளிர்மணிவேதியொன்றம்ம. (௧௭)

அத்தகுமணிசெய்வேதிமேல்விறல்சாலராளரியாகியஞான்று
பொத்தியவகங்காரந்தவிர்த்தாண்டபுண்ணியந்தெரிந்ததுவிளக்கும்
வித்தகமலசத்தியுந்தவிர்த்திவொன்விழைந்தரிமுழுவதுமரியா
யுத்தமனடிகடாங்கினுலென்னவொளிர்மணிமடங்கலாதனமேல். (௧௮)

உருவுளொன்ருயும்விழியுளொன்ருயுமொளிவளர்தலைக்கலனுயு
மருவியவிரதக்காலுளொன்ருயும்வைகிடமாயும்வீற்றிருப்பெற்
சொருவருங்களங்கமொழியெனவிரப்பவொழித்தலுமுவந்தருடெரிப்பான்
வெருவருமதியமுடிமிசைப்பொலியும்விதமெனவெண்குடைநிழற்ற. (௧௯)

அற்புதமுடிமேல்விளாயிலாவருக்கமகற்றுபுதாம்வதிதருவான்
பொற்புறமலர்வெண்டாமரைமலர்கள்புந்தியுற்றெழுந்திருபாலும்
விற்பயின்மதிகண்டுறைத்தலைகவிழ்ந்துமீளவுமெழுந்துழிதரல்போ
லெற்பொலிபசும்பொற்பூணணிமடவாரிரட்டுசாமரைதலைபனிப்ப. (௨0)

புலிதருசருமப்பிருதிவியனையிற்பொங்கொளியப்புவான்முடியி
னொலிதருதழல்கைநுதற்கணினடியாருறுமலக்குரோதவானுளத்தின்
மலிதருநம்போலெங்கணுங்கலந்துவயங்குவதில்லெனவுவந்து
கலிதருசிவிறிவிவெளியெழுந்துகமழ்திருமேனிமேற்றவழ. (௨௧)

திரிபுரமெரித்தாய்காலனைக்குமைத்தாய்சிலைமதனீறெழவிழித்தா
யரிபிறப்பைந்திற்றண்டநன்குஞற்றியதண்மூதலறிகுறிபூண்டாய்
பரிகலமறையோன்றலையறுத்துவந்தாய்பற்பலதேவரொன்பணிந்தா
யிரிதரவசுரராளவிலர்ச்செற்ருயென்றுவந்தியர்விறல்பாட. (௨௨)

பலமுகமுழவமுதற்பலவியமும்பட்டர்கணத்தவர்சிலரதிர்ப்ப
நலமலிபணிலம்வயிர்குழல்பீலிநகுதுளைக்கருவிகள்பிறவுஞ்
சிலகணமிசைப்பத்திவவியாழெடுத்துச்சிலர்நரம்புளர்ந்திசையமுத
மலகறவூற்றவரம்பையர்முதலோரபிநயத்தொடுமெதிர்நடிப்ப. (௨௩)

சாரணரியக்கர்சித்தர்கந்தருவர்தக்ககிம்புருடர்கின்னரர்வெள்
வாரணரமரர்தயித்தியரரக்கர்மடலவிழ்கமலம்வீற்றிருக்கு
மாரணர்நறியப்சுந்துழாய்ப்படலையலங்கியவிலங்கெழினிறத்து
நாரணர்பிறருந்தலைமிசைக்கரங்கணன்றெழீஇக்குவித்தனர்நெருங்க. (௨௪)

குழிவிழிப்பிறழ்ப்பற்குடவயிற்றிருண்மெய்க்குறுகுறுநடந்திகுறுத்தாட்
பழிதபுத்தியங்குபாரிடக்குழுவும்பற்பலவயிரவர்கணமுங்
கழியருட்கொடியசிறுவிதிமகத்தைநக்கருக்கியவீரனுமறத்தை
யழிவறக்காக்குமையனும்பிறருமணிமையினெருங்கினர்நிற்ப. (௨௫)

முனைவணங்குரவன்றிருமரபினுக்குமுதற்குருவாகியமுன்னோ
னனைவரும்பரமசிவனெனப்புகழ்வராருணிரம்புறப்பெற்றோன்
றனைநிகர்கருணைநந்தியெம்பெருமான்றடங்கரச்சூரல்சற்றசைத்து
நினையவரவர்தந்தராதரந்தெரிந்துநிறுத்துபுதிருமுனருலாவ. (உ௬)

கயமுகத்தவுணனுயிர்தபமாட்டிக்கடவுளர்பலரையும்புரந்த
வயவொருமருப்புப்புகர்முகக்கடவுள்வலப்புறத்தினிதுவீற்றிருப்ப
வியனமருலகமுழுதுமீன்றெடுத்தும்விளங்கருட்கன்னியேயாய
கயன்மருள்கருங்கட்செய்யவாய்ப்பசுந்தோட்கவுரிமற்றிடத்துவீற்றிருப்ப. (உ௭)

ஒருவரைதாழ்த்திக்கொடுந்தொழிற்றகுவருடலெனும்பல்வரையுயர்த்தி
வெருவருமொருவாரிதியறச்சுருக்கிவிளம்பியதகுவர்மெய்நெய்த்தோர்
பெருகியபலவாரிதியுறப்பெருக்கிப்பிறங்குமத்தகுவரைச்சாய்த்துப்
பொருவில்வானவரைநிமிர்த்தவேடனக்கும்புண்ணியவுமைக்குநள்ளிருப்ப. உ௮

சடைமுடிநிலவுவெள்ளமுதொழுக்கச்சற்பங்கள்காரமுதொழுக்க
வடையொருகரமானுடையெனப்பொலியுமரைப்புலியஞ்சியதேய்ப்ப
மிடைமிசைத்தாவவெள்ளியதரங்கம்விரிபுனல்கைத்தழலெழறேர்ந்
துடைதரும்பொருட்டுக்கிழக்கிழிதரவேரொருங்கமைதிருமுகம்பொலிய. (உ௯)

புண்ணியநீறுநெற்றியிற்பொலியப்பொங்கிமேலெழுந்தழனோக்கந்
திண்ணியப்பகைதேர்ந்தடங்கியதொளிரத்திருமுகக்கண்களோரிரண்டுங்
கண்ணியகருணைமடைதிறந்தென்னக்கதிர்த்திடக்கரிசறுப்பவரோ
யெண்ணியகழலிற்கழலுறத்தனிவீற்றிருந்தனனெம்மையாளுடையான். (௩0)

வேறு.

காமருதிருவோலக்கங்கண்களிகொள்ளநோக்கித்
தேமருவலரின்மேலான்றிகழ்மணிமறுவினோடு
மாமருவலங்கன்மார்பன்வலனுயிர்குடித்ததோன்றல்
பாமருவியசீர்மற்றயாவரும்படிந்தாரின்பம். (௩௧)

அவரவர்முறைப்பாடெல்லாமஞ்செவிநிறையவேற்றுத்
துவர்படிசடிலத்தோன்றறூயநன்மொழியாற்கங்கை
யிவர்முடியசைப்பானோக்குநோக்கினாலின்பமெய்தக்
கவரருள்செய்துபோக்கிக்கவுரியோடெழுந்தானன்றே. (௩௨)

காந்தளம்போதிற்செய்யகமலமென்மலரோய்ந்தென்ன
மாந்தளிர்மேனியம்மைவலக்கரமிடக்கைபற்றிப்
பூந்தளிரடிப்பூமாயோன்புதல்வன்வாய்வைத்துக்காப்புற்
றுய்ந்தபாதுகைமேற்சூட்டியந்நின்றுபெயர்ந்தானன்றே. (௩௩)

மரகதச்சுடரினோடுமாணிக்கச்சுடரெழுந்து
பரவுறநடந்தாலென்னப்பயப்பயநடந்துசென்று
கரவறவெதிர்தாழ்வோர்க்குக்கண்ணருள்வழங்கிப்புக்கான்
குரவமந்தாரமாதிகுலவுபூந்தெய்வச்சோலை. (௩௪)

புண்ணியப்பெர்ழிலினூடுபுகுதலும்பொழில்காப்பாளர்
நண்ணியவிருப்பிற்போற்றிநயந்திருபாலுமோடித்
தண்ணியமலர்கள்கொய்துதருந்தொறும்வாங்கிமோந்து
நுண்ணியமருங்குறுசிநுனையினுஞ்சேர்த்தாநின்றான். (௩௫)

அறிபொருள்செறியத்தோன்றுமான்றவர்கவிபோல்வித்துச்
செறிகனிசுமந்துநிற்குந்தாடிமச்சிறப்புநோக்காய்
குறிபருப்பொருளொன்றேய்ந்தசெய்யுளிற்குலவித்தோன்றும்
பறிகனிசுமவாநின்றுபரந்தமுந்திரிகைநோக்காய். (௩௬)

மிகுபொருளமையக்கற்றும்வெளிப்படைசெய்யார்போல
மிகுகனிமண்ணுட்கொண்டுவெளிசெயாப்பலவுநோக்காய்
நகுபொருள்பலவுமியாருந்தெவ்வுறநயப்பார்போல
நகுகனிபலவுமியாருந்தெவ்வவாழ்நன்மாநோக்காய். (௩௭)

தம்முடையாயுள்காறுநூலொன்றேசமைப்பார்போல
விம்முகாய்க்குலையொன்றம்மவெளிசெயுமரம்பைகாணு
யம்மபற்பலசெய்வாரினடர்பழக்குலைபல்கொண்டு
செம்மையுமுயர்வுவாய்ந்துதிகழ்தருதெங்குகாணாய். (௩௮)

சிலகவியானுஞ்செய்துசெறிதருபயன்படாரா
யலகறவுரைவிரித்துப்பயன்படுமவரையொப்பச்
சிலகனியானுமீன்றுசெறிதருபயன்படாவா
யலகறவலர்விரித்துப்பாடலமமைவநோக்காய். (௩௯)

ஒருகவியேதுக்கொண்டுபலவிரித்துரைப்பார்போன்றோர்
மருவடிகொண்டுபற்பல்விரிந்தமாதவியைநோக்காய்
பெருகியசெய்யுட்கோதும்பிறங்கிலக்கணமாறுற்றுக்
கருதடியொன்றேகொண்டவஞ்சியைத்தெரியக்காணாய். (௪௦)

ஆன்றநின்கொங்கைபோலவரும்பியக்கொங்கைமேலாற்
சான்றவொண்சுணங்குபோலத்தண்சுணங்கெழமலர்ந்தே
யேன்றநின்பதத்துமென்மையெனப்பொலிபஞ்சிகாய்த்துத்
தோன்றவிங்கமராநிற்குஞ்சொற்பொலிகோங்கம்பாராய். (௪௧)

ஏயுநின்மேனிவண்ணமெனப்பசுந்தளிர்களீன்றே
யாயும்வெண்ணகையின்வண்ணமாமெனவரும்புகான்று
சாயுநுண்மருங்குல்வண்ணமெனத்தளர்ந்தொசிவதாகித்
தோயுமென்குணத்தமுல்லைக்கொடிபலதுவன்றல்காணாய். (௪௨)

எனப்பொழில்வளத்துட்சில்லவிமயமீன்றெடுத்தபாவை
தனக்கினிதியம்பியெங்கடம்பிரானங்கண்மேய
மனக்கினிதாயசெம்பொன்மண்டபத்தினிதுமேவி
யுணற்கருமுவப்பிற்சிங்கவொளிரணையிருந்தான்மன்றோ. (௪௩)

அண்ணலவ்வாறுமேவமற்றவனனுஞைபெற்று
வண்ணமென்மலர்கள்கொய்வான்மலைமகளாயவன்னை
யெண்ணருமிகுளைமார்களேவலினுவந்துமேவக்
கண்ணகனுங்கோர்பாங்கர்க்கயிற்சிலம்பொலிக்கச்சென்றாள். (௪௪)

உந்தியின்வனப்பைவவ்வியொளித்தனவென்றுதேர்ந்து
முந்தியமௌவல்கொய்துமுளையெயிற்றழகுவவ்வி
யந்திலிங்கொளித்ததென்றுதளவரும்படங்கக்குற்றுஞ்
சந்தணிகொங்கைநங்கைவேறிடஞ்சாரச்சென்று. (௪௫)

படர்வளியலைப்பத்தேம்பிப்பற்றுக்கோடின்றியொல்கு
மடர்பசுங்கொடிகட்கெல்லாந்தனித்தனியவிர்கொம்பூன்றித்
தொடர்புசெய்திடுமினென்றுதோழியர்சிலரையேவி
யிடர்தபுத்தெம்மையாளுமேந்திழையங்கின்றேகி. (௪௬)

மற்றொருபாங்கரண்மிமணங்கமழ்ந்திங்குமேய
பொற்றபாடலத்தின்பூவும்புதுமதுப்பொழியுஞ்சோங்குஞ்
செற்றமந்தாரப்பூவுஞ்செறிதரக்கொணர்மினென்றே
யுற்றவர்சிலரைப்போக்கியங்கின்றுமுவந்துசென்று. (௪௭)

வேறுமோரிடத்தையண்மிமென்புனலகத்துப்பூத்த
நாறுசெங்கழுநீர்நீலநக்ககோகனகமின்ன
கூறுகொண்டணைமினென்றுகூடநின்றவரையேவித்
தேறுநர்க்கருளுந்தேவிதனித்தனடிருமினாளே. (௪௮)

மதிமுடிக்கணவற்சாரும்வாஞ்சையின்வருபிராட்டி
திதியமைபாண்டிநாடுசெய்தமாதவத்தின்பேற்றால்
வதிமருதவனச்சீர்த்திவானமும்பொதிர்த்துச்செல்ல
வதிருமகிழ்ச்சியாலேயாடலொன்றகத்துட்கொண்டு. (௪௯)

பாதசாலங்களெல்லாம்பாதமேற்செலவொதுக்கி
யோதருங்காஞ்சியாதியுத்தராசங்கங்கொண்டு
மேதகமருங்குல்யாத்துமென்மெலநடந்துபின்போய்ப்
பூதநாயகன்முகக்கண்புதைத்தனண்மலர்க்கைகொண்டு. (௫௦)

நிறைகலைமதியத்தேவேநிகழ்கதிர்த்தேவேநீவி
ரிறையவன்முகத்துக்கண்ணாயிருக்கினும்விடேம்யாமென்று
கறைமுகில்கரங்கணிட்டிக்கதுமெனமறைத்ததொக்கு
மறைபெரும்புவனமின்றாளையர்கண்புதைத்தகாட்சி. (௫௧)

முராரியென்றுரைக்கும்பெண்யான்முதலைநீங்குபுதனித்து
விராம்வனத்துறைவதோர்ந்தும்வெளிப்பட்டுமறைந்தும்வாட்ட்
விராவகையொழிப்பவின்றேயென்றவண்மறைத்ததொக்கும்
புராதனர்முகத்துநாட்டம்புராதனிமறைத்தகாட்சி. (௫௨)

மறைமொழியிகந்தபர்விமகத்தவியுண்ணப்புக்கு
முறைதிறம்புற்றமையன்முகத்துவீற்றிருந்துநாளு
மறைதரவிளங்கவொல்லாதவிரிருகதிர்காளென்று
பிறைநுதல்சினந்துபொத்தும்பெற்றியும்பொருஉமக்காட்சி. (௫௩)

அடியவருளத்துநீங்காவருட்பிரான்முகத்துநாட்டங்
கடியமைக்குழலிவ்வாறுகரங்களாற்புதைத்தலோடு
நெடியபல்புவனமுற்றுநிறைந்தபல்லுயிருஞ்சாம்பக்
கொடியகேவலமேயென்னக்குருட்டிருள்பரந்ததம்மா. (௫௪)

எண்ணருநாள்கடோறுமெழுந்துதற்சாயாநிற்கு
மண்ணலங்கதிர்கடம்மையடர்த்திடவலியிலாமை
யொண்ணலமின்றித்தேம்பியொடுங்கியவந்தகாரந்
தண்ணமுதனையாள்செங்கைத்தலங்களைப்புகழ்ந்ததன்றே. (௫௫)

தெறுப்கையொழிந்ததென்றுசெறிந்தெழுமிருளோடொத்துக்
கறுவுநம்பகையுந்தீர்ந்துகழிந்ததென்றுவப்புமேவி
மறுவறவிதுசெய்தாட்குமாறெவன்செய்வாமென்று
குறுநகைச்செவ்வாய்மாதைக்கூகையும்புகழ்ந்ததம்மா. (௫௬)

செய்யதாமரைநேர்நாட்டச்செல்வனுமெண்கணனு
மையவாயிரங்கணனுமிமைப்பிலாதமர்விண்ணோரும்
வெய்யவாளவுணர்சித்தர்விஞ்சையர்முதலோர்யாரு
மொய்யவாமிருள்வீக்கத்தான்மூட்டமொத்திருந்தாரன்றே. (௫௭)

வெருவில்பாதலத்துநாளுமேவிவாழுலகமொல்லா
மிருபுலன்கவராநிற்குமேற்றமார்நமதுகண்க
ளொருபுலன்கவருமற்றையொருபுலன்கவர்ந்ததில்லை
மருவுகாரணம்யாதோவென்றெண்ணினர்மயங்காநின்றார். (௫௮)

மம்மருற்றுயிர்களெல்லாமின்னணமயங்காநிற்ப
வம்மவென்செய்தாள்பேதையாயினார்போலவென்று
செம்மலெம்பெருமான்வல்லேதிருவுளத்திரக்கம்பூண்டு
விம்முசெந்தழனுதற்கண்டிறந்தனன்றிமிரம்வீய. (௫௯)

நுதல்விழிதிறத்தலோடுநோக்கியவெம்பிராட்டி
விதலையுற்றஞ்சியென்னாய்விளைந்ததென்செய்தாமென்று
முதலவனெதிரோவந்துமுன்னுறுகிழைத்தகுற்ற
மதலையாய்பொறுத்தியென்றுவணங்கினளெழுந்துநின்றாள். (௬௦)

திருவடிவணங்கிநின்றசேயிழையணங்கைநோக்கிப்
பொருவருங்கருணைமூர்த்திபுண்ணியப்பூங்கொம்பன்னா
யொருவருமுயிர்கண்மமம்ருழந்திடநீயென்செய்தாய்
மருவுநித்தியமுன்னாயகருமங்கண்மாய்ந்தவன்றே. (௬௧)

நீள்வரியறலைவென்றநிறைகுழற்கொம்பனாய்நம்
வாள்விழிபுதைத்துவிட்டவளாயறைகணமேயேனு
மாள்செய்பல்லுயிர்க்குமூழியாயிற்றேயனையதாய
மூள்வருபாவநின்மேற்றன்றியார்முகந்துகொள்வார். (௬௨)

எண்ணரும்பாவமேனுமிரித்தருள்கொழிக்கவல்ல
கண்ணருநமதிலிங்கபூசனைகைக்கொண்டன்றிப்
பண்ணருங்கழுவாய்வேறுபகர்ந்திலமனையதாய
நண்ணருங்கழுவாயாற்றினும்வந்துகலப்பேமென்றான். (௬௩)

என்றலும்பிரியாத்தேவிபிரிவதற்கிரங்கியேங்கி
யொன்றியபிரிவாற்றோன்றுமச்சமுமுனாற்றுபூசை
நன்றியல்சிறப்பாற்றோன்றுமன்புநன்கிருபாலீர்ப்பத்
தன்றுணைப்பெருமான்றாளிற்றாழ்ந்தெழுந்திதனைச்சொல்வாள். (௬௪)

அடிகளோடடியேனாற்றுமாட்டலைக்கருதியன்றோ
தொடியவாங்கரத்தாற்கண்கள்புதைத்ததுசொல்லொணாத
கொடியதீவினையாய்வந்துமுடிந்ததுகூறலென்னே
கடியதாம்பிரிவையுன்னிநெஞ்சகங்கலங்காநின்றேன். (௬௫)

எவ்விடத்தடியேன்சென்றுபூசனையியற்றாநிற்ற
லெவ்வமுற்றொழியநீவந்தருளுநாளெந்நாளென்று
கௌவையிற்றேவிநெஞ்சங்கரைந்துவிண்ணப்பஞ்செய்யக்
கௌவையிற்கடனஞ்சுண்டோன்கனிந்திஃதருளிச்செய்வான். (௬௬)

மங்கைநீயஞ்சேனின்னைப்பிரிந்தியாம்வழங்கலில்லை
துங்கமார்பரதகண்டந்துற்றமர்பன்னாட்டுள்ளுஞ்
சிங்கலிறமிழ்நாடொன்றே சிறந்ததந்நாட்டினுள்ளும்
பங்கயப்பழனஞ்சூழும்பாண்டிநாடுயர்ந்ததாமால். (௬௭)

அத்தகுபாண்டிநாட்டுளருச்சுனவனமென்றொன்று
வித்தகமாயதானம்விருப்பமிக்குடையேமன்ன
வுத்தமதலத்திலியாமேயாதலாலுங்கணெய்திச்
சித்தம்வைத்தருச்சிப்பார்க்குவிரைந்தருள்செய்தல்கூடும். (௬௮)

ஆதலாலங்கணெய்தியருச்சனையாற்றினெல்லைக்
காதலாலருள்வோமியாம்வந்தென்றனன்கருணைமூர்த்தி
போதெலாம்பொலியுங்கூந்தற்பொற்கொடியிருகைகூப்பி
மாதர்சாலனையதானத்தெல்லையைவகுத்தியென்றாள். (௬௯)

தன்னுயிர்த்தேவிவேண்டத்தம்பிரானருளிச்செய்வான்
றென்னுயிர்த்தழகுவாய்ந்ததிருப்பெருந்துறைக்குச்சற்றே
மின்னுயிர்த்தனையாய்மேற்கில்விரிபொழிற்சாலிவாடி
யென்னுயிர்த்தலத்திற்குத்தென்கீழெனவிசைக்குந்திக்கில், (௭௰)

மன்னியவளஞ்சால்வீளாவனத்திற்குத்தெற்குவாய்மை
மின்னியதிருவாடானைத்தலத்திற்குவடக்குமேலோர்
பன்னியவொருதேனுறும்பகர்தருவிரிசலாறுந்
துன்னியவடக்குந்தெற்குந்துன்னவுற்றுளதத்தானம். (எக)

அத்தகுபெருந்தானத்தினருச்சுனவிருக்கநீழ
லுத்தமவிலிங்கமாகியொளிருவோம்வன்மீகத்துள்
வித்தகநீயங்கெய்திமேதகுபூசையாற்றிற்
சத்தறிவின்பயாம்வந்தருளுதுஞ்சார்தியென்றான். (எ௨)

என்றருள்புரிந்துபெம்மானிரும்பொழிலிருக்கைநீத்து
மின்றிகழ்பேரத்தாணியகத்தெழுந்தருளிமேவி
யொன்றவந்திரப்போர்க்கெல்லாமருள்சுரந்துறைந்தானிப்பான்
மன்றலங்குழலாள்கூடத்தொடர்ந்தனண்மாதர்சூழ (எ௩)

நாயகனிருக்கைசார்ந்துநளினமென்பதத்திற்றாழ்ந்து
தூயநல்விடையும்பெற்றுத்துவன்றியகணங்கள்சூழப்
பாயதென்னாடுசெய்தபாக்கியப்பேற்றாலம்மை
யாயமென்மருதவைப்பையணுவதற்குள்ளங்கொண்டாள். (எ௪)

இன்னநற்காதைகேட்டேமின்னைட்யாதனத்திருனைப்
பன்னகப்பாயலானைப்பானுவைமற்றையோரை
யுன்னரும்பிரமமென்பாரொள்ளியவாயும்வாழ்க
நன்னர்கொணுவும்வாழ்கவென்றுமேனவிலலுற்றான். (எ௫)

திருக்கண்புதைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ரு-க்கு. திருவிருத்தம்.—௩௪௨.

---

## தேவிதவம்புரிபடலம்.

பன்னியெவருந்தழுவுபாண்டிவளநாட்டு
மன்னியவருச்சுனவனம்புகுதும்வாஞ்சை
முன்னியெழவேழுலகு முற்றுமினிதீன்ற
கன்னிதலைமீ துருவிகையொடுமெழுந்தாள். (க)

வாழியறமோம்புமலைமங்கையெழலோடும்
வீழிபொருவாயெழிலனிந்திதைமுன்மேய
தோழியரொழுந்தனர்துவன்றிமகிழ்துள்ளிக்
காழ்வலியமைந்துயர்கணங்களுமெழுந்த. (௨)

குடைகவரிசாமரைகொழுஞ்சிவிறிபிச்ச
மிடையொலியறோரணம்விரும்புவடவட்டந்
தடையறநெருங்கினதடாரிபணைதக்கை
யுடைகடன்முழங்குமுழவாதிகளொலித்த. (௩)

சங்குவயிர்பீலியுறுதாரைகணரன்ற
நங்குதவிர்வீணையினரப்பொலியெழுந்த
மங்குதலில்கஞ்சவொலியாதிகண்மலிந்த
பொங்குமறைவாழ்த்தொலிபொலிந்துதிசைபோர்த்த. (௪)

பன்னரியசெங்கதிர்பலப்பலதிரண்டா
லன்னதொருதிப்பியவிமானமெதிரண்ணப்
பொன்னகரவாணர்பொழிபூமழையின்மூழ்கித்
தன்னனையதாய்மகிழ்தலைக்கொளவிவர்ந்தாள். (௫)

ஏவறலைகிற்குமட்மாதருமிவர்ந்தார்
காவலமைகூன்குறள்கனன்றுமுனெழுந்த
வோவவிலதாவிருதுமாகதருளைப்ப
நாவலர்சொறென்றிசைநடத்தினள்விமானம். (௬)

வடார்துதிசைநின்றுயர்தெனுதிசைவாஞ்சை
படாதமகிழ்வோடெழுபருப்பதமடந்தை
தடாதவலியோனமர்தலந்தொறுமணைந்து
விடாநசையினேத்துபுவிமானமிசையுய்ப்பாள் (௭)

காசியையடைந்துவிரிகங்கைநதிமூழ்கிப்
பூசியவிபூதியொடுபுண்டரிகன்மாயோன்
பேசியபுகழ்ப்பரமர்பெய்கழல்வணங்கி
யாசில்பலநாடுநதியாவையுமிகந்து. (௮)

நன்னைட்டெனநெல்விளைதடம்பணையுடுத்த
தொண்டைவளநாட்டுமகிழ்துன்றிடவணைந்து
கண்டைவிடையானமர்கவின்பொலிதலந்தோ
றிண்டைமலராதிகொடுபூசனையியற்றி. (௯)

நாடுபலபோற்றுநடுநாட்டகநுழைந்து
காடுபடுசெஞ்சடையர்காமர்தலமெல்லா
நீடுபெருகன்புநிகழப்பெரிதுபோற்றி
யாடுமயிலன்னவியலாவையினகன்று. (௧௦)

பொங்குபுனறங்குபொருபொன்னிவளமன்னி
யெங்குநிகழ்சோழவளநாட்டினிடையெய்தித்
தங்குபலவாகியதலந்தொறுமிறைஞ்சிக்
கொங்குமலர்தூயதுகடந்தகுறிகொள்வாள். (௧௧)

வெடிகெழுவராலெழுபுமேகமிசைபர்யும்
படிகெழுதடங்கள்பொலிபாண்டிவளநாட்டுத்
துடிகெழுமருங்குலொருதோகையடைகுற்றுள்
வடிகெழுமலர்த்தொகுதிவாணவிறைப்ப. (௧௨)

ஆங்குமருவுந்தலமனேகமும்வணங்கிப்
பாங்குபெறுகோனுணாகுறிப்படிபடர்ந்து
தீங்குதவிரன்புநெகிழ்சிந்தையுணிரம்ப
வோங்குநலருச்சுனவனத்தினருகுற்ருள். (௧௩)

மதுநதியுமான்மியம்விழாவிரிசலென்னு
முதுநதியுநாயகன்மொழிந்தபடிகண்டாள்
சதுமுகன்முன்னோர்தொழூதலங்களொருநான்கும்
புதுமையுறநாற்றிசைபொலிந்துறுதல்கண்டாள். (௧௪)

இறைவனுணாசெய்தலமிதேயெனமதித்து
நிறையொளிவிமானமிசைநின்றுடனிழிந்து
குறையறுகணங்கண்முதலோர்குழுமியேத்தப்
பொறைகெழுமடந்தைபுவிபோந்தனள்பணிந்தாள். (௧௫)

வேறு.

பணிந்தெழுந்துபராவிச்கரங்குவித்
தணிந்தபாங்கியரியாருமணைதரத்
துணிந்தவென்றிக்கணங்களுஞ்சூழ்வரத்
தணிந்தசாலையத்தாழ்வனம்புக்கனள். (௧௬)

செல்லச்செல்லச்சிவானந்தமூற்றெழ
வொல்லற்காயவுரோமஞ்சிலிர்த்திட
மல்லற்ரேகைமயில்பலவற்றையும்
வெல்லற்காம்பலவிம்மிதநோக்குவாள். (௧௭)

பகலெலாம்பன்மரத்தோடொன்ருயிருந்
திகலிலாவிரவெய்திடும்போழ்தினிற்
புகரிலாவழல்பொங்கியதொத்தொளிர்
நிகரிலாதநெடுந்தருவோர்புறம். (௧௮)

இளமரத்தின்கனைப்பங்கெழுந்தொறுங்
களமிலாவிளங்கன்றுகனைத்ததென்
றுளநெகிழ்ந்துகனைத்துறமேதியவ்
வளநிலம்புகுமாட்சியுமோர்புறம். (௧௯)

கொம்பரோதில்வெண்கோட்டுக்களிறுமா
வம்பொற்றேர்முதலாகியவற்புத
மும்பராரும்வியப்புண்டாக்கிடும்
வம்பறுததருவொருமாடரோ. (௨௦)

பட்டகட்டையிற்பாதுகைசெய்ததி
லொட்டவேறினுட்னும்பரார்பதிக்
கிட்டமாகவெழுந்துகொடுசெலுங்
கட்டமில்லாத்தருவொருகண்ணெலாம், (௨௧)

உறவிளைத்தவுடம்புடையார்களு
முறவடைப்பினுதிப்பவளாரினு
லுறவடித்துமறலியுறுகக
ருறவிடுக்குந்தருவுமொருபுறம். (உஉ)

அடித்துமோதியலைக்குந்தருவொரீஇத்
துடித்தயற்புறந்துன்னினச்செல்லலை
நொடித்துவல்லையுயச்செயுநோன்றருப்
பிடித்துமேவப்பிறங்குமொருபுறம். (உ௩)

ஆயைநீத்தவமலன்றிருவருள்
மேயையாலெத்தவம்விளைத்தாய்கொலிம்
மாயைநீத்தவடிவமுறற்கெனச்
சாயைநீத்ததருவுமொருபுறம். (உ௪)

எந்தநோயினிடர்ப்படுவோர்களு
முந்தவந்துபரிசித்துமோப்பரோ
லந்தநோய்நணுயாதித்துயரொடுஞ்
சிந்தநல்குந்தருவுஞ்செறியுமால். (உ௫)

கவலைவெம்பசிகாற்றுஞ்செயலிலார்
திவலைபர்லுணிற்றிங்களோராறள
வுவலைபோன்றவுடம்பைவருத்துமத்
தவலைநீக்குந்தருவுமொருபுறம். (உ௬)

அன்னபேதியகிலமவர்ங்கருஞ்
சொன்னபேதிசுடுவிடத்திற்கமு
தன்னபேதியுன்பேதியவைமுதற்
சொன்னபேதித்தருக்கடுவன்றுவ. (உ௭)

போற்றுநீர்நிழல்போலப்பொலிதரு
மேற்றுவார்கொடியெந்தைகொலோவெனச்
சாற்றுமேன்மைதனைப்பிறர்காணுறத்
தோற்றுறுத்ததருவுந்துவன்றுவ. (உ௮)

கருநிறத்தவுங்காலையிளங்கதிர்
பொருநிறத்தவுமாகிப்பொலிதரு
திருநிறத்தவிர்சித்திரமூலங்கள்
வருநிறத்தவ்வனத்தொருபாலெலாம். (உ௯)

வெட்டுகின்றநவியம்விளங்கொளி
பட்டுமல்கும்பசியபொன்னையுறு
முட்டுநீக்கமுகிழ்க்குந்தருக்களும்
பெட்டுநிற்கும்பிறங்கியோர்பாலெலாம். (௩௦)

வேறு.

இன்னவாயவளம்பலவெங்கணாநோக்கின
ளன்னரற்புதமற்புதமென்றுநயந்தனள்
முன்னருஞ்சிவலிங்கமுகிழ்த்தவருச்சுன
மன்னநின்றதெங்கென்றுதருவினள்வல்லியே. (௩௧)

அன்னமென்னடையாடொருவிச்செலுமாயிடை
யென்னரும்புகழ்கின்றவருச்சுனமென்பது
நன்னர்மேயசெழுமையிளமைநலங்கொடு
முன்னர்நின்றதுகண்டனளின்பமுகிழ்த்தெழ. (௩௨)

வானமுட்டவெழுந்ததருக்கண்மலிந்தவிக்
கானமுட்டறுமாலயமாசக்கவின்றதா
லீனமுட்டறவெண்ணினர்க்குமருள்சூக்கும
மானமுட்டிலருச்சுனமென்றுவியந்தனள். (௩௩)

தேவியங்ஙனஞ்செப்பிவியந்ததிறத்தினா
லோவிலாதுசிறுமருதொன்றுளைப்பராற்
காவிமேயகழிக்கடல்சூழுநிலத்தவர்
பாவியத்தருநோக்கினும்பண்ணவனாவனே. (௩௪)

அன்னதாருவையங்கைகுவித்தடிநோக்கினான்
முன்னமாலயன்காணரிதாயமுழுமுதன்
மன்னமேயவன்மீகமுங்கண்டுவணங்கின
ளின்னவற்புதங்கண்டறியேனெங்குமென்றனள். (௩௫)

செய்யதாமரைமேலுறைநான்முகச்செம்மலும்
பையராவணைமேற்றுயில்செங்கட்பகவனு
மையவின்னமுநாடருஞ்சிற்பரவற்புதன்
வெய்யவெற்கெளிதாயினனென்றுவியந்தனள். (௩௬)

பூசையாற்றும்விருப்பமுளத்துப்பொலிதர
மாசைநீத்தமணியிற்பொலிந்துவயங்கரு
ளீசைமேற்றிசையெய்தியோர்தீர்த்தமுண்டாக்கின
ளோசைகூர்சிவகங்கையையங்கணுறுத்தினள். (௩௭)

இன்னதீர்த்தப்பெயர்சிவகங்கையென்றிட்டனள்
சொன்னநூல்விதிபோற்றியத்தீர்த்தந்துளைந்தனண்
மன்னநீறுபுனைந்தொளிர்கண்மணிமாலையு
மன்னமென்னடைபூண்டலர்கொய்யவெழுந்தனள். (௩௮)

தோழிமாருமத்தீர்த்தந்துளைந்துவெண்ணீறணிந்
தாழிபோலுமருட்பரைபாங்கரடுத்திட
வாழிவாய்ந்தபிடகைமலர்க்கரந்தாங்கியே
யூழிநாளுமுலப்பருநந்தனத்துற்றனள். (௩௯)

வேறு.

நந்தியாவட்டமலரிபுன்னைகுராழன்மந்தாரமொண்வகுளங்
கொந்தவிழ்செருந்தியசோகுகூதாளங்கொழுமலர்வழைகன்னிகாரங்
கந்தமார்கடிச்சைபாடலங்கொன்றைகருதுவெட்பாலைசெவ்வகத்தி
முந்தியவேங்கைகொக்குமந்தாரைமுகிழ்த்தபொன்னுவிணைவெட்சி. (௪௦)

மருவுபொன்மந்தமாதளைபட்டிமராமலர்பருத்திசெவ்வரத்தம்
பொருவருகாஞ்சிகடம்பெருக்கழிஞ்சில்புரசுபன்னீரிருவாத்தி
கருநிறச்செம்பைதுரோணம்வெள்ளிலோத்தங்கண்டங்கத்திரிவழுதுணைமா
வொருவருங்கூத்தன்குதம்பைநற்குளியொள்ளியகுராமலர்கோட்டம். (௪௧)

கணைதருவில்வஞ்சதருப்பைதிருமால்காந்திபச்சறுகொளிர்வன்னி
யுணைதருநாவல்செவ்வந்திதுளசியோங்குவெண்காக்கணம்பூளை
விணைதருபச்சைகருவிளங்காசைவிருப்புறுகாணாசெங்கீரை
வணைதருதருப்பைமருதிருவேலிமருவுநீர்முள்ளிமாதவியே. (௪௨)

துவிலாமிச்சவேர்வெட்டிவேரொண்குரியகாந்திமஞ்சணத்தி
தாவிலாநரந்தமெலுமிச்சைபாரிசாதகமுறுபுலிதொடக்கி
மேவியகிளுவைசந்தனநாணல்வெள்ளின்மாவிலிங்கநாயுருவி
பாவியவிதழொன்றுடையதாமரையெட்பசுமலர்கொட்டையங்கரந்தை. (௪௩)

நெல்லியொண்கரந்தையிலந்தைசிந்துவாரநீர்மிட்டான்கேதகைவாகை
சொல்லியகுச்சிப்புல்கருங்காலிநோன்றிசாலிப்பயிர்தான்றி
மெல்லியகுருந்துமருமருக்கொழுந்துவெற்றிலைமல்லிகைமயிலை
நல்லியற்குராவிருமுநமென்குவளைநளினமற்றிவைமுதற்கொய்து. (௪௪)

சுவைபடுகனிகளுள்ளனகவர்ந்துதுயநன்மருதடியடைந்து
செவையுறமுகந்துதோழியர்கொடுக்குஞ்சிவகங்கைமஞ்சனமாட்டி
நவையறவாய்ந்தபூமுதற்பலவுநன்மணுப்புகன்றுறச்சூட்டிக்
குவைபடுகனிகளூட்டிவன்மீகக்குழகனைப்பூசனைபுரிந்து. (௪௫)

திருந்துவன்மீகந்தனக்கியல்வடகீழ்த்திசையுறுகாடுமுற்றகழ்ந்து
பொருந்துபல்கணங்களியற்றிடப்பட்டபுனிதமாம்பன்னசாலையின்க
ணருந்துதெள்ளமுதுநஞ்சமாக்கொண்டவண்ணலார்திருவுருநினைந்தே
யிருந்தனள்புவனத்துயிரெலாம்வருந்தாநின்றுகாத்தருளுமெம்பிராட்டி. (௪௬)

புற்றிடங்கொண்டசிவலிங்கப்பெருமான்பூசனைகாலங்கடோறும்
பற்றிடங்கொண்டவன்பொடுபுரிந்துபன்னசாலையினினிதமர்ந்து
கற்றிடங்கொண்டகருத்தினர்கருத்திற்கழலுருக்கழலகத்திருத்தி
மற்றிடங்கொண்டவுலகமுற்றுயிர்ந்தாள்வைகலுமமர்பவளானாள். (௪௭)

மலர்மணமெனவுமணியொளியெனவுமதுச்சுவையெனவுமுற்றுணர்ந்த
பலர்புகழ்பெருமானிடத்தகலாதபாவைமாதவம்புரிபண்பா
லர்செறியனையவனத்தரிக்குருளையானைக்கன்றொடுளவளாவு
முலர்தலிலுழுவைமுலைபொழிசுவைப்பாலுணங்குமான்கன்றினையருந்தும். (

கொடுவெயிலுடற்றநெளியராச்குருளைகுளிர்நிழல்பெறச்சிறைவிரித்துக்
கடுமுரட்கலுழன்மிமிசைப்பயிலுங்கருப்பைகளுணங்குருவன்னம்
படுவிடப்பாந்தள்பருஉப்பணம்பைச்கும்பைம்புதவிடையகப்பட்ட
வடுவறுமானமாறுடையுரோமம்வானரமெலவிடுவிக்கும். (௪௧)

பட்டப்பன்மாமுகனிதழைத்தரும்பிப்பன்புறக்காய்த்துறப்பழுத்த
துட்டபல்விலங்குமியங்குவார்ந்கியன்றதொழிற்றலைநின்றுபசரிப்ப
கட்டமிலனையபுதுமைமுற்றளந்துசட்டொத்திநெருமுளரோ
வட்டவொண்சடையாய்தெரிதியென்றுரைத்துமாதவச்சுதன்மேலுரைப்பான்.

தேவிதவம்புரிபடலம் முற்றிற்று.

௯ படலம் - ௬-க்கு - திருவிருத்தம் — ௩௬௨.

---

## தேவியைக்கண்ணுற்றபடலம்.

அறிதருநெறிதழுவுநராயவமரர்சண்மனநிலையழிவெய்தக்
குறிதருகொடுவினைநனியாற்றுங்கோளைவல்லவுணர்கள்களியெய்தச்
செறிதருபிறவுயிர்களும்வாடித்திசைதிசைநிலைகுலைதாமுன்று
ளெறிதருபெருவலிமிகுசண்டனென்றொருதானவனுளனானான். (௧)

எரிவடவனல்குளிர்தருகண்ணனிகலுருமொலிநிகர்குரலுள்ளான்
வரிகழலொலிகழல்வலிமிக்கான்வடவரைகவிழ்தருதிணிதோளான்
றரியலர்பிறகிடநகைசெய்வான்சலதியினிலையெனுமுருவத்தான்
சரிபரியிரதமெய்வலிவீரர்கடல்பலவெனவளைதரவுற்றான். (௨)

பொருவலியவுணர்கள்பலர்சூழப்புகவொருமொருகுரவனையுற்றுத்
திருநறவுருள்செயுமடிநேணின்சேவடிசரணெனவடைகுற்றேன்
மருவியவொருநதிபிலிநாயேன்வாழ்வகையருளுதியெனத்தாழ்ந்தான்
கருதியகுரவனுமெழுகென்றுகருணையின்முகமலர்ந்திதுசொல்வான். (௩)

வலிமிகுவானவர்நினைக்கையமாற்றலராயினுமென்னுவ
ரொலிபவகூடினுமொருநாகமெறியுமுயிர்ப்பினிலறமாயும்
பொலிதருபனிவரைப்பாலெம்பிப்புரிசடைச்சடவுடனடியுள்ளி
மலிதவமியற்றினவ்வருளாளன்வந்துவரம்பலநல்குவனால். (௪)

இமையவர்மாற்றலராதலினீயியற்றுதவத்திலுக்கிடையூறே
யமைதரவாற்றுவரவைக்கேதமஞ்சலையெஞ்சலிறவமோங்க
வுமையொருபாலுடைப்பெருமான்வந்தொல்லையினருளுவனுறுசெல்வஞ்
சமைதரவோங்குமின்னேநீதாழ்க்கலைநடமதியென்றனனால். (௫)

என்றநுளாரியனடிபோற்றிப்பெருந்தனலிமவரைப்பாற்சென்றான்
பொன்றலில்மனவலியுடையோனுய்ப்பொறிவழிச்செலவுமுற்றறவோப்பி
மன்றவெழுந்தழல்சூழ்ந்தோங்கிமல்கவளர்த்ததனடுவைகிக்
கொன்றைமுடிப்பெருமான்பாதங்குறித்துணைநீர்ந்தருந்தவஞ்செய்தான். (௬)

இடிபலவீழ்த்துதன்முதலாகவெண்ணரிதாமிடையூறுற்றிக்
கடிமலர்மாலிசைமுடிவானோர்கழிந்தனரொன்றுமஞ்சிலனென்றே
மடிவருமொருநிலையினனாகிவருடமோராயிரந்தவமாற்றப்
பொடியணிமேனியெம்பெருமான்முன்போந்தனனவன்புரிதவமகிழ்ந்தே. (௭)

இறையவன்காட்சிதந்தனனமக்கிங்கென்றுணர்ந்தெழுந்தனனடிபணிந்தான்
முறைவலம்வந்தனன்சென்னிமிசைமுகிழ்த்தகைவிரித்திலன்முன்சென்று
மறைநவிறோத்திரம்பலசெய்துவாழ்ந்தனன்வாழ்ந்தனனென்றுரைத்தான்
கறைகெழுகண்டனுண்மகிழ்ச்சியனாய்க்கருதியவரமெவனுரையென்றான். (௮)

ஐயநின்னடிமலரிடத்தென்றுமளப்பருமன்பெனக்குண்டாக
வையமும்வானமும்பாதலமுமாற்றலரிரிதரத்துரந்தரசு
செய்யவெவ்வுலகினுமானுருவஞ்சிவணினர்சிவணியவிரண்டாலு
மெய்யமராற்றுழியுடையாதவித்தகவீரமிக்குளதாக. (௯)

இந்திரன்மாலயன்முதலாகயாவருமென்பணிதலைக்கொள்ள
வந்திலிவ்வரங்கொடுத்தருளென்றானண்ணலுமிளநகைமுகத்தரும்பச்
சந்தணிமுலைக்கொடியிடைமடவார்தமைப்பொருள்படுத்திலன்வானோர்செய்
சிந்தலிறவப்பயனெனமகிழ்ந்துசெப்பியயாவுந்தந்தனமென்றான். (௧௦)

மனநினைபலவரமும்பெற்றேன்வாழ்ந்தனன்வாழ்ந்தனனடியேனென்
றனகன்மெல்லடிமலர்மிசைப்பணிந்தானங்கணன்மறைந்தனனவணின்று
தனதருட்குரவனதிடஞ்சார்ந்துதாழ்ந்தனன்றவம்புரிந்ததும்பெம்மான்
கனவரங்கொடுத்ததுமெடுத்தோதிக்களிப்பொடுவிடைகொடுபுறம்போந்தான். ()

வேறு.

வானளவோங்கியவொருப்ருப்பதத்தைமாகடல்வளைந்தெனவவுணர்தற்சூழக், கானளவோங்கியகற்பகநாட்டிற்காற்றினும்விரைதரப்புகுந்தறைகூவி, யூனளவோங்கியபெரும்படைவானோருடன்றமராடினரொருங்குடைந்தோட, மீனளவோங்கியபாற்கடல்கலக்கும்வெற்பெனக்கலக்கினன்விறலுடைச்சண்டன் ()

வஞ்சினம்பகர்ந்தனன்வச்சிரம்விதிர்த்தான்மதமலையுகைத்தனன்விழியழல்கால, வெஞ்சினங்கொடுசமர்புரிந்தனன்மகவான்விளைசமர்க்காற்றிலனோட்டெடுத்துய்ந்தா, னஞ்சினர்யாவருமனையபொன்னுலகையடிப்படுத்தினன்கொடிநாட்டினனப்பா, லெஞ்சினவுலகங்களெங்கணும்புகுந்தானிருஞ்சமராடினனிகலறுத்தெழுந்தான். (௧௩)

மீதலத்தமரரிந்திரனயன்மாலேர்ன்வென்கொடுத்திரிதரத்துரந்தனன்பொருது, பூதலத்தியங்கினனொருநொடிப்பொழுதிற்பொள்ளெனத்தாட்படுத்துறுபிலவழியே, பாதலத்திழிந்தனனவயிற்பொலியும்பலரையும்வாட்டினனுணைவைத்தெழுந்து, மாதலத்துயரியபூமியின்மீட்டும்வந்தனன்பற்பலமாதரைமணந்தான்.

விரைதரத்தென்றிசைமயன்சமைத்துதவும் விசயமென்றுரைசெயுநகர்குடிபுகுந்து,புரைதரச்சிங்கவொண்மணியணையிருந்துபூங்குடைநிழற்றிடச்சாமரையிரட்டக்,கரைசெயற்கரும்பலதேவரும்போற்றக்கண்ணில்பல்லவுணருங்களித்தனர்

சூழ, வுறைசெயற்கரும்பலபோகமுந்துய்த்தேயுவந்தரசிருந்தனனுறுவலிக்கொடியோன். (கரு)

கொடியவனிங்ஙனமரசுசெய்நாளிற்குளிர்விசும்பமரர்கள்கற்பகமாலை, முடியவனெனுமகபதிகழிதாயமுண்டகம்வீற்றிருப்பவன்றுளவணியு, நெடியவன்முதலியவமரர்கள்குழுமிநிலைகுலைந்தென்னினிச்செய்குதமென்று, கடியவன்மனத்தவன்புரிதொழிற்கஞ்சிக்கயிலையங்கிரியினையடைந்தனர்மாதோ. (கசு)

வெள்ளியங்கிரிமிசையிவர்ந்தனர்நந்திவிமலனையடிதொழுதேத்தினரடிகே, டுள்ளியகொடுந்தொழிற்பெருவலிச்சண்டா சுரன்றவம்புரிந்துபல்வரங்களும்பெற்று,நள்ளியவெங்கணைஞாட்பிடைப்பொருதுநெடுங்கிடத்துரந்தெவ்வகைவளனு, மெள்ளியகுறிப்பொடுந்தெவ்வினனமர்வானிதுமுறையிடுவதற்கடைந்தனமென்றார். (கஎ)

என்றலுமிரங்கியநந்தியெம்பெருமானிறையவன்றிருமுனமிமையவர்பலருஞ், சென்றிடவிடுத்தனன்கொன்றையஞ்சடிலத்தேவெதிர்சென்றனர்தொழுதடிவிழுந்தா, ரொன்றியகவலையங்கடற்கரைகாணாதயங்கினமடிகளென்றுரைத்துரைத்தழுதார், கன்றியமனத்தெமைக்காத்தல்செய்திரங்காய்களைகண்மற்றிலமுனையன்றியென்றிரந்தார். (கஅ)

பெருந்தவமாற்றியகொடுவலிச்சண்டன்பெறும்படியடிகண்முன்னருளியவரத்தாற்,கருந்தலையவுணர்கள்பலரொடும்புகுந்துகற்பகநாடுமுற்றப்பலநாடு,மருந்திறல்வலியினிற்கவர்ந்தனனமர்வர்னவனுயிர் தொலைத்தெமைப்புரத்தியின்றென்னிலிருந்தநின்களவிடத்தினைவெளிவிடுத்தியின்றெனினுதல்விழியாவதுநிறத்தி.

இசைத்தவித்திறங்களிலியாதுசெய்திடுதியம்புகென்றடிப்பணிந்தனரரவணைக்கண், ணசைத்தவன்றிருவுளமிரங்கிமற்கருணையலர்முகத்தெழவிசைத்தருளுவனமரீர், பசைத்தவிர்தருதலின்மன்னுடையவுணன்பகரருந்தவம்புரிந்துறுவரங்கொளுநாள், வசைத்தலைவிடுமெனமகளிராப்பொருளாமதித்திலனதுநமக்குதவியதுணர்வீர். (உ௦)

வேறு.

ஆணுருவமைந்தோராலுமமைந்தனவாலுமாலு
மேணுருவனையான்றன்னைவேறலின்றிமையீர்பெண்மை
பூணுருவொன்றேயன்னாற்பொருதுயிர்சவட்டுமற்றுன்
மாணுருவுமையாள்பாதம்வணங்கியீதுணர்மினென்றான். (உக)

என்றலுமயன்மாலாதியிமையவரெம்பிரானே
நன்றருள்செய்தாயெங்கணாயகியமர்வதெங்கே
கன்றலின்றெளியேமுய்யக்கருணைசெய்தருள்வாயென்றா
ரன்றவர்க்கியம்பியெங்கோனருள்சுரந்தருளுமன்றே. (உஉ)

நம்மிடையொருவினோதநயந்துகண்புதைத்தலாலே
விம்முபேரிருளின்மூழ்கிமெலிந்துயிர்கருமநீத்த
வம்மவிப்பிழைதீரும்பாக்காற்றுதிசபூவாயென்று
செம்மைசேர்புவியுண்மேவச்செலவிடுத்தனமெங்கென்னில். (உங)

நாவலந்தீவின்மேலாம்பரதகண்டத்துநாளு
மோவரும்பலதேயத்துமுத்தமமாகிவைகுந்
தாவருந்திராவிடஞ்சாறேயத்துத்தவத்தாரன்றி
மேவரும்பாண்டிநாட்டுவிளங்குமோர்தெய்வத்தானம். (உச)

மதுநதிவடபாலோடவயங்கியவிரிசலென்று
முதுநதிதென்பாலோடமுகிழ்த்ததோரடவியாங்கு
விதுவெனவிளங்காநிற்கும்வெள்ளியமருதொன்றுண்டா
லதுதுயரகற்றுநிற்குமடைந்துகண்டவர்க்குநாளும். (உரு)

அத்தருநிழலில்யாமோரருட்குறிவடிவமாகி
நித்தலும்வசிப்போநம்மைநெடியவன்மீசமொன்று
பொத்தியாங்கிருக்குமந்தப்புண்ணியதலத்தைச்சார்ந்து
சித்திசானமக்குமேலாத்தீர்த்தமொன்றியற்றிக்கொண்டு. (உசு)

காலங்கடொறுந்தப்பாமேசருத்துறுபூசையாற்றி
யேலங்கொள்குழலாள்பன்னசாலைசெய்தினிதுமேவிச்
சீலங்கொணமைத்தியானஞ்செய்துவீற்றிருப்பளந்த
மூலங்கொடலத்தையுற்றுமொழிமினிதனையாட்கின்னும். (உஎ)

அனையமாதலத்தைநீவிர்காதலித்தடைந்தபோதே
நினைவெலாமுற்றுநிற்குநெடும்பகைக்கிறுதிகூடுந்
துனையநம்மருளும்வந்துசூழ்தருமாதலாலே
புனையவாமமரீரங்குப்போவதுகுறிமின்யாமும். (உஅ)

மெய்வளைக்கருளுமாறுபின்னரேவருதுமென்று
னெய்வளைத்தொளிருமொண்கூர்நேமியோனுதிவானோர்
மைவளைத்தன்னகண்டவள்ளலார்செம்பொற்பாதங்
கைவளைத்திறைஞ்சிப்போற்றிவிடைகொண்டார்களித்துமாதோ. (உகூ)

விடைகொடுபோந்துவானோர்வெள்ளியங்கயிலைநீங்கி
யுடைகடற்புடவியுற்றுருறுவலிச்சண்டற்கஞ்சி
யடையுருமுழுதுமாறியாற்றிடைப்பட்டகங்கைச்
சடையவன்றனமெல்லாந்தாழ்ந்துதாழ்ந்திறைஞ்சிப்போந்தார். (௩0)

காழகிற்றுணியுஞ்சந்துங்கதிர்மணித்திரளுநால்வாய்
வேழவெண்மருப்பும்பொன்னுநித்திலக்குவையும்வீசி
யாழ்கடற்கிடங்குதூர்க்குமகன்புனற்பொருநைசூழ்ந்து
வாழியவளமிக்கோங்கும்வழுதிநன்னாடுபுக்கார். (௩க)

சங்கினமுயிர்த்தமுத்தந்தலைத்தலைநிலவுவீசிச்
சங்குழும்பகலேயாகச்சண்டிடும்பாண்டிநாட்டி
லெங்குமாதலமும்போற்றியெம்பிரானருளிச்செய்த
பொங்குமாதலமெங்குள்ளதென்றுளம்பொருந்தவாய்ந்தார். (௩உ)

வரைபெயர்த்தெறிந்துசெல்லுமதுநதிகண்டுகொண்டு
கரையகலந்திருள்ளுங்களிப்பினுங்கலந்தமூழ்கி
வினைசெலப்பெருக்குவாய்ந்தவிரிசலாறதுவுங்கண்டக்
குறைபுனலகத்துமூழ்கிக்குலவுபேரின்பமுற்றார். (௩௩)

இருநிறநதியுங்கண்டோமிவைக்கிடையுள்ளதாய
மருமலர்வனமேயம்மான்வன்மீகத்தமராநிற்குந்
திருவமர்மருதமேவித்திகழ்வனமென்றுதேர்ந்து
பொருவிறம்முருவங்கொண்டார்பொய்யுருவகற்றிமாதோ. (௩௪)

தேவியைக்காண்பான்சிந்தைசெய்தினிதேகுவார்முன்
மேவியவளியலைப்பவிடபங்களசையுந்தோற்றங்
காவியங்கண்ணுமொன்னுளிருக்கின்றுளென்றக்கானம்
பூவியல்கரங்கணீட்டிப்புலவரையழைத்தல்போலும். (௪௫)

மருதமர்கானமெங்குமாமலர்பொலியுந்தோற்றங்
கருதுநந்தமைநீங்காதகடவுளர்பலரும்வந்தா
ரொருதனிமுதல்விசெய்யுமோங்கருட்குரியராவார்
பொருதபேகையுந்தீர்வாரெனப்பொலிதோற்றம்போலும். (௩௬)

நால்வகைநோயுமின்றிநண்ணியதருச்சால்கானம்
பால்வகைவளங்களெல்லாங்கண்குளிர்படைப்பப்பார்த்து
மால்வகைகழிந்ததூயமனத்தினராகிப்புக்குச்
சேல்வகையுகளுந்தெய்வச்சிவகங்கைத்தீர்த்தந்தோய்ந்தார். (௩௭)

வெள்ளியநீறுபூசிவிரும்புகண்மணியும்பூண்டு
வள்ளியவெழுத்தைந்தெண்ணிமருதமர்தானஞ்சார்ந்து
தெள்ளியவன்மீகத்திற்செறிசிவக்கொழுந்தைக்கண்டு
துள்ளியவுவகையோராய்ச்சூழ்ந்துதாழ்ந்தெழுந்தார்வானோர். (௩௮)

தந்தையைக்கண்டுகொண்டோந்தாயினைக்காண்போமென்று
சிந்தையுட்களிப்புமேவவடகிழக்கெல்லைசேர்ந்து
நிந்தையில்பன்னசாலைநேருறப்புகுந்தாராங்கு
முந்தைமாமறையுங்காணாமுதல்வியைக்கண்டாரன்றே. (௩௯)

காண்டலுமுவகைபொங்கக்கண்கணீரருவிபாய
நீண்டமெய்ப்புளகம்போர்ப்பநெஞ்சநெக்குருகாநிற்பத்
தாண்டவம்புரியாநிற்குந்தம்பிரானிடப்பான்மேய
மாண்டவொண்குணத்துத்தேவிமலரடிதொழுதுவீழ்ந்தார். (௪0)

அடியரோமுய்ந்தேமுய்ந்தேமசுரரால்வருத்தப்பட்ட
மிடியரோமுய்ந்தேமுய்ந்தேம்வெவ்வினைத்தொடக்குண்டஞ்சுங்
கொடியரோமுய்ந்தேமுய்ந்தேங்கோலங்கண்டின்பமுற்ற
படியரோமுய்ந்தேமுய்ந்தேமெனப்பகர்ந்தாடினாரோ. (௪௧)

அரியநாயகியைக்கண்டோமம்பலத்தாடியுள்ள
மரியநாயகியைக்கண்டோம்வன்மையினமையாட்கோடற்
குரியநாயகியைக்கண்டோமுலகெலாமொருங்குபெற்ற
பெரியநாயகியைக்கண்டோமெனப்பலபேசினாரோ. (சஉ)

வழுத்துவார்பவநோய்தீர்க்கமலைவருமருந்தேவன்மை
கொழுத்தவாளவுணன்சாடக்குலைகுலைந்தடைந்தவேழைத்
தொழுத்தையேமுய்யுமாறுசுரந்தருள்செய்யிலென்று
முழுத்தபேரறிவினூடுமுயக்கியதாகுமென்றார். (சங)

இவ்வண்ணமலறியோலமிடுமிமையவரைநோக்கி
யவ்வண்ணம்போலவெங்குமறிவுருவாகிநிற்குஞ்
செவ்வண்ணப்பெருமான்பாகந்தீர்தராச்செல்விநுங்கட்
செவ்வண்ணமுற்றதிங்ஙனெய்தியதெற்றுக்கென்றாள். (சச)

என்றலும்பிரமனேர்சென்றிருசரங்கூப்பிச்சொல்வான்
மன்றலங்குழலாய்சண்டனென்பவன்றவத்தான்மாண்டு
மின்றயங்கிடைநல்லாளைப்பொருள்செயான்விண்ணோராதி
யொன்றமற்றியாவராலுமுடைதராவரம்பெற்றுள்ளான். (சரு)

அன்னபாதகனோடுமுதலியவனைத்துந்தோற்றுப்
பன்னகாபரணன்முன்போய்ப்பகர்ந்தனங்கயிலாயத்தின்
முன்னவனின்பான்மேவமுடுக்கினானிங்குமேவி
யுன்னதாள்போற்றப்பெற்றோமென்றுரையாடினானே. (சசு)

வண்ணப்பொன்மலரின்மேலான்மலர்க்கரங்குவித்துச்செய்த
விண்ணப்பமுழுதுங்கேட்டுமிகுபெருங்கருணைகூர்ந்து
தண்ணப்பண்சடைப்பிரானார்தந்திருவருளோநீவிர்
கண்ணத்துன்பகற்றுமிங்குக்கலந்ததென்றுவகைபூத்தாள். (சஎ)

நிறைவலியவுணன்சாடநிலைகுலைந்திங்குமேய
கறையில்வானவர்காணெஞ்சங்கவன்றிடரஞ்சல்வேண்டா
குறைபடவனையாற்கொன்றுகுலத்தொடுநம்மைக்காப்போ
மிறையிலென்றபயமீந்தாளேழுலகீன்றசெல்வி. (சஅ)

தேவியாதரவிற்கூறும்வார்த்தைதஞ்செவியிற்கேட்டுப்
பாவியேமுய்ந்தேம்யாதும்பயமிலையினிமேலென்று
மேவிமாமலரிற்சீர்த்தமென்பதம்பலகாற்போற்றி
வாவிசூழனையகானமருவிவீற்றிருந்தார்வானோர். (சகூ)

வண்மைசாறவத்துவாய்மைச்சவுநகமுனிவர்வானோர்
திண்மைசாலங்குச்சென்றுதேவியைக்கண்டவாற்றா
லொண்மைசாலறிஞர்கண்டதேவியென்றுரைப்பரந்தத்
தண்மைசாறலத்தையென்றுசாற்றிமேற்சாற்றுஞ்சூதன். (ரு0)

தேவியைக்கண்ணுற்றபடலம் முற்றிற்று.

ஆக படலம் - எ - க்கு - திருவிருத்தம் — சகஉ.

---

# சண்டாசுரன்வதைப்படலம்.

கந்தமலரோன்முதல்வானோர்கண்டதேவியெனுந்தலத்து
நந்தமருதினடியமருநம்மானடித்தாமரைமலருஞ்
சந்தமுலைமென்கொடிமருங்குற்றலைவியடித்தாமரைமலரு
முந்தவணங்கிப்பெருகன்பின்முதிர்ந்துபணிசெய்தொழுகுநாள். (௧)

மிறைசெயவுணன்கொடுங்கோன்மைவெள்ளிவரைநம்பெருமான்பால்
முறையினியம்பமருதவனமுற்றியிறைவியடிவணங்கி
யறைமினெனவுய்த்தனனிறைவியடிசார்ந்துரைப்பவஞ்சாமே
யுறைதீர்கவலையொழித்துமெனவுரைத்தாளுரைத்தமொழிப்படியே. (௨)

வல்லையியற்றும்படிதுதிப்போம்வம்மினெனவானவர்யாரு
மொல்லையெழுந்துசிவகங்கையுற்றுமூழ்கிநீறணிந்து
செல்லையலைக்குமருதவனத்தேவதேவனடிபணிந்து
முல்லைமுறுவற்பெருந்தேவிமுன்வந்திறைஞ்சித்துதிக்கின்றார். (௩)

எல்லாம்வல்லசிவபெருமானெழிலார்தருநின்னொடுகலந்தே
யெல்லாவுலகும்படைத்திடுவானெல்லாவுலகும்புரந்திடுவா
னெல்லாவுலகுந்துடைத்திடுவானெல்லாவுயிர்க்குமறைப்பருள்வா
னெல்லாவுயிர்க்கும்வீடருள்வானென்றாற்பெரியநாயகிநீ. (௪)

எல்லாமறையின்வடிவானாயெல்லாமறையும்வியாபித்தா
யெல்லாமறையுந்தொழப்படுவாயெல்லாமறையுமேகலையா
யெல்லாமறைக்குமுதலானாயெல்லாமறையின்முடியமர்வா
யெல்லாமறையின்முடிவுணராயென்றாற்பெரியநாயகிநீ. (௫)

என்றுதுதிக்கும்வானவருக்கிரங்கியருள்கூர்ந்தருட்செல்வி
நன்றுநமதுதுதிமகிழ்ந்தோநயந்துபெரியநாயகியென்
றின்றுநமைநீர்சொற்றமையாலென்றுநமக்கிப்பெயராக
வொன்றுநமதுகவலையுமின்றொழிப்போமுணர்மினென்றுரைத்து. (௬)

பொல்லாவவுணன்மட்வானைப்பொருளாமதித்திடாமையினா
லொல்லாவினையானவமதித்தார்தமைக்கொண்டவனையொறுத்தலே
நல்லாதரஞ்செய்திறனென்றுநன்றாராய்ந்துதன்கூற்றி
னெல்லாவுலகுநடுங்கவருவித்தாளொருபெண்ணிறைவியே. (௭)

கரியகடலொன்றிரண்டுபிறைகவ்வியெழுந்தோற்றமெனத்
தெரியவுயர்ந்தபெருவடிவஞ்சிலைக்கும்வாயில்வளையெயிறும்
பெரியவடமேருவுஞ்சமழ்க்கப்பிறங்குமுலையுமிளங்காலைக்
குரியகதிராயிரம்வளைந்தாலொக்குமரையிற்செம்பட்டும். (௮)

வாளதாதிபொலிகரமும்வட்டவைகால்கண்களுமண்ட
கோளமேவுநெடுமுடியுங்குறிக்குந்திசைபேர்த்திடுபுயமு
மூளவெழுந்தசினக்கனலுமுழங்குமுருமிற்பொலிகுரலுங்
காளவுருவுங்கொடுதோன்றிக்காளியெனும்பேர்தழீஇநின்றாள். (௯)

நின்றகாளியிறைவியடிநேர்சென்றிறைஞ்சிப்போற்றியெழுந்
தொன்றவுலகம்வாய்மடுக்கோவுருட்டிவரைகள்பொடிபடுக்கோ
கன்றவயன்மாலாதியரைக்கையிற்பிசைந்துபொட்டிடுகோ
துன்றவமைந்தகடல்குடிக்கோசொற்றிபுரியும்பணியென்றாள். (௧௦)

என்றுகுமரிகூறுதலுமிமையோர்க்கிடுக்கணணிசெய்யுங்
குன்றுநிகர்தோட்சண்டனுயிர்குடித்திநினக்குப்பணிபுரிய
வொன்றுமகளிர்பற்பலருமுகைக்கும்விறல்சானூர்தியுநா
மின்றுபடைத்துத்தருகின்றோமென்றுணினைந்தாளப்பொழுதே. (௧௧)

குன்றுபிளப்பவுலகநிலைகுலையமுழங்குங்குரல்யாளி
யொன்றுவெளிப்பட்டதுகடல்வந்தொருங்குசூழ்ந்தாலெனவதிர்த்துத்
துன்றுவலிசாலிடாகினிகள்சூழ்ந்தார்குமரியூர்தியா
யொன்றுபணிசெய்திடுவோராயுறுகமாவேமடவீரே. (௧௨)

என்றுகருணைநோக்கருளியிகல்சால்வீரியுருவஞ்சித்
துன்றுமனத்துட்குடையாராய்த்தூரத்தகலுமாலாதிக்
கன்றுமமரர்தமைநோக்கிக்கடவுளானீரொல்லீரு
மொன்றுமடவார்வடிவமெடுத்துறுவீர்குமரியுடனென்றாள். (௧௩)

என்றபொழுதேயிந்திரன்மற்றிந்திராணியுருக்கொண்டான்
மன்றல்கமழுமலர்மேலான்வயங்குபிராமியாயினான்
வென்றதிகிரிப்படைமாயோன்விறல்சாலொருவைணவியானா
னென்றமற்றைவானவருமுற்றமடவாருருக்கொண்டார். (௧௪)

கோடிகோடிவானவர்தங்கூறென்றுரைக்குமடவாருங்
கோடிகோடிவலவைகளுங்கூடிப்போற்றவெழுந்துலகங்
கோடிகோடிமுறையுயிர்த்தாள்குளிர்தாட்கமலமிசைநறும்பூ
கோடிகோடிதூய்ப்பணிந்துகொண்டாள்விடைவெங்குரற்காளி. (௧௫)

கண்ணார்மருதவனத்தளவுங்காலானடந்துகடந்தப்பா
னண்ணார்வெருவவருகாளிநாடுமுழுதுங்குடியேற
விண்ணார்நகரந்திருவேறவிழைபுண்ணியமுமீடேற
வெண்ணார்நிறங்கீண்டெரம்வாய்மடுக்கும்யாளியேறினாள். (௧௬)

கலிக்குந்தத்தமூர்திமிசையிவருமாறுகடைக்கணிப்ப
வொலிக்குமணிப்பூண்மடவார்கள்பலருமுள்ளமுவந்திவர்ந்தார்
சலிக்கும்புடவிவெரிநெளியத்தரங்கக்கடலுங்குமிழியெழ
வலிக்குமொருதென்றிசைநோக்கிவிடுத்தாள்யாளிமாகாளி. (௧௭)

இருகுரோசத்தளவெய்தியாளியிழிந்தங்கினிதிருந்தா
ளருகுமாதரரசாதற்கபிடேகஞ்செய்தடிபணிந்து
பெருகுசாலமெனச்சூழ்ந்துபேணிக்காவல்புரிந்திருந்தார்
திருகுதீரவ்விடத்திவணாந்தேவிசாலமெனுந்திருப்பேர். (௧௮)

அன்னதேவிசாலபுரமம்மைசெம்மையபிடேக
மென்னநவிலுந்திருவடைந்தவிடமாதலினங்கருள்ளார்
பன்னவரியபெருந்திருவம்பொருந்திப்பயில்வரடைந்தோருஞ்
சொன்னமுதலாம்பலவளனுந்துலங்கப்பெறுவதெஞ்ஞான்றும். (௧௯)

அந்தத்தலத்தினினிதமர்ந்தவலகைக்கொடியாள்வைணவிமுற்
சந்தக்குவிமென்முலைமடவார்தம்மைநோக்கியொருதூது
முந்தப்பகைவனிடத்தனுப்பிமுன்னந்தெரிந்துமற்றவன்போர்
நந்தப்பொருதலறனென்றுநன்றென்றுரைத்தாரெல்லாரும். (௨௦)

ஆனலங்குப்போய்மீளுமாற்றலுடையார்யாரென்ன
மானுவியன்றகருநெடுங்கண்மடந்தைபிராமியெனப்படுவாள்
போனனன்றுபுகன்றுவருமென்றுபுகன்றாள்வயிணவிமற்
றானல்விளங்குஞ்சூலத்தாளுள்ளதுணைத்தாய்நீயென்றாள். (௨௧)

என்றலோடும்பிராமியெழுந்திறைஞ்சியானேபோய்வருவ
லொன்றவிடைதந்தருளென்றாளுவப்புற்றனையாண்முகநோக்கி
மன்றவிசையநகரடைந்துவல்லவவுணன்றனைக்கண்டு
கன்றவியற்றல்கடனன்றுகடவுளாணையெனப்புகறி. (௨௨)

ஈதுமொழியினவன்மறுப்பானென்னில்விரைந்துபடையோடு
மோதுசமருக்கெழுதியெனமொழிந்துவருதியென்றுரைத்தாள்
காதுகொடுஞ்சூற்கங்காளிகருதும்பிராமிநன்றென்று
போதுமலர்தாய்ப்பணிந்தெழுந்துபோந்தாள்விசையநகர்நோக்கி. (௨௩)

வெளியேவழியாவிரைந்தெழுந்துசென்றுவிசையநகர்புகுந்து
களியேயடைத்தமனத்தவுணர்கைகள்கூப்பித்தொழுதேத்த
வொளியேமணிமாமண்டபத்துளோங்குமடங்கலாதனமே
லளியேயாதகுணத்தினமர்சண்டாசுரன்முன்னடுத்தனளால். (௨௪)

அடுத்துநிற்குமடந்தைமுகமவுணர்கோமானெதிர்நோக்கிக்
கடுத்துநமக்குநேராகக்காமர்மங்கையிவளடைதற்
கெடுத்துநிறுவுகருமம்யாதிவள்யாரின்னேயறிதுமென
மடுத்துநீயார்நின்வரவென்மடந்தாயுரைத்தியாலென்றான். (௨௫)

உலகுபோற்றுமருதவனத்துறையாநின்றமாதேவி
யிலகுசரணமடுத்திறைஞ்சியேத்தியிமையாரெல்லாரு
மல்குதவிர்நின்பெருங்கொடுமையறைந்துகாத்தியென்றுரைப்ப
நலகுமானைமுன்னுயிர்த்தநங்கையொருமங்கையையுயிர்த்தாள். (௨௬)

மேருவிடிக்கவேண்டினும்வீரைகுடிக்கவேண்டினும்
பாரும்விசும்புமேல்கீழாப்படுத்துநிறுத்தவேண்டினு
மாரும்வியக்கவொருநொடியிலமைப்பாள்காளியெனும்பெயராள்
சோருமமரர்தமைப்புரந்துதுட்டர்தமைமாட்டிடுந்துணிபாள். (௨௭)

அனையள்விடுக்கவருந்தூதியான்பிராமியெனப்பெயரோ
னினையவமரர்கொடுங்கோன்மையியற்றுகுணநீத்தெஞ்ஞான்றும்
புனையவமையுஞ்செங்கோன்மைபொருத்துகுணநீபொருந்திலுனை
முனையகுலப்பெருமாட்டிமுனியாதுவக்குமுயிர்வாழ்வாய். (உஅ)

அன்றேலவள்கைப்படைக்குவிருந்தாதல்சரதமிதுபுகல்வா
னின்றேயினளென்றனையுணர்தியிதுநீகருத்திலுறக்கொள்ளி
னன்றேபணியவுடன்போதியன்றேலமர்க்குநன்னுதிவன்
குன்றேபுரையுந்தோளாயென்னுரைத்திகூறுகூறென்றாள். (உகூ)

கேளாமாற்றங்கேட்டிடலுங்கிளர்வெங்கோபந்தலைக்கொண்டு
மூளாநிற்பவிழிசிவந்துமுகரோமங்கடிதுடிக்க
வாளாநகைத்துக்கையெறிந்துவானமுழுதுமடிப்படுத்த
தாளாண்மையினேற்கிம்மொழியுங்கேட்டறகுமென்றிஃதுரைப்பான். (௩0)

நீயோர்பேதைநின்னைவிடுத்தவளுநினக்குமூத்தாளே
பாயோரரவாக்கொண்டான்முற்பலரும்போரிற்புறங்கண்டே
னாயோர்பகையுமில்லாதேற்கடுத்தபகையுமழகிற்றே
பேயோர்கொடியாதேவிடுபெற்றிநினைக்குந்தொறும்வியப்பே. (௩க)

பேதாயிங்குநீமொழிந்தபேச்சுமுழுதும்பெரிதாய
தீதாய்முடிந்ததுனைத்தண்டஞ்செய்தல்புகழன்றிவணின்று
போதாய்விரைந்தென்றனன்கேட்டபொற்கொம்பனையாண்முறுவலித்துக்
கோதாய்விடுமேகுணமுமழிகாலங்குறுகினெனன்றிசைத்தாள். (௩உ)

என்றலோடுமோதிபிடித்திழுத்துவம்மினிவளையென
நின்றசிலரைப்பார்த்துரைக்கநெடியோனுதிவானவர்மே
லொன்றவேவாதுரைத்தமொழியுரைக்கவந்தவொருபெண்மே
லின்றவாவியேவியதென்னென்றுபிணங்கியவரகன்றார். (௩௩)

கண்டமாதுமுறுவலித்துக்கழியுங்காலங்குறுகிற்று
சண்டவிரைந்தாகவபூமிதன்னிலுனதுபெரும்படையோ
டண்டவடைந்திலாயெனினின்றாண்மையெவனுமென்றுரைத்துக்
கொண்டவிரைவினவணின்றுமெழுந்தாடேவிமுன்குதித்தாள். (௩௪)

கண்டதேவிவாழ்வானேகழிவானேசண்டாசுரனுட்
கொண்டதுணிபென்னுரையென்றாள்குணப்பிராமியடிவணங்கி
மண்டநெடும்போராற்றுதற்கேவருவான்வந்துமாய்வான்மற்
றண்டர்புரிமாதவம்பழுதாங்சொல்லோவன்னையறியென்றாள். (௩ரு)

சான்றதேவியொருதேவிசாலபுரத்திவ்வாறிருந்தா
ளான்றவிசையநகர்மேவுமவுணர்கோமானுளங்கறுத்துத்
தோன்றவமைச்சர்படைத்தலைவர்முதலோரிங்குத்துன்னுகவென்
றேன்றதுதுவிடவவருமிறுத்தார்பணியென்னெனவினவி. (௩சு)

வந்தார்முகத்தைவாளவுணர்கோமானோக்கிமறமுடையீர்
சந்தார்முலையோர்மாகாளிசாற்றிவிடுத்ததுணர்ந்தீரோ
முந்தாரவத்திற்படைகளொடுமுழங்கினாட்பிற்கெழுகவென
வந்தார்புனையுமவரிசைந்தாரமைச்சர்பல்லோருனங்கனகன். (௩௭)

தொழுதநவில்வான்பெருமான்பாற்றேலாவரநீகொண்டநாள்
பழுதுபடுமேந்திழையாலொன்றெண்ணிப்பொருளாப்பற்றிலா
யெழுதுபுகழாயதனாலேயெண்ணிப்போருக்கெழுகென்று
னுழுதுவரிவண்டுழக்குதாருரவோன்சினங்கொண்டுரைப்பான். (௩௮)

அந்தநாளிற்பொருளாகமதித்தேனல்லேனதுமறப்புற்
றிந்தநாளிற்பொருளாகமதித்துளேன்கொலென்னுரைத்தாய்
முந்தவமருக்கஞ்சினையென்றுமொழிந்தவவன்கருத்தை
யுந்தவுணராதிகந்துரைத்தான்மூர்க்கர்க்குணர்த்துவாருளரோ. (௩௯)

அன்னபொழுதின்மகதியாழ்முனிவன்வினாவினுங்கடுத்து
மன்னநினக்கேயாக்கமுளவாகவென்றுவாய்மொழிந்து
பொன்னங்கடுக்கைமுடிக்கணிந்தபுத்தேணினக்குக்கொடுத்தவரந்
தன்னமுணராதொருமடந்தைசமருக்கெழுந்தாள்படையோடும். (௪0)

படையுமிடையுஞ்சிறுமருங்குற்பாவைமாதையென்றக்கா
லடையும்விறன்மற்றவட்காமேயண்ணல்பெண்ணென்றிகழாமே
யுடையுங்கடனோர்படையினொடுமுருத்துச்சென்றுபோர்புரிதி
மிடையும்வாகைநின்னதேயென்றான்கேட்டவெங்கொடியோன். (௪௧)

குய்யம்வைத்துமுனியுரைத்தகூற்றைக்கூற்றென்றெண்ணுனை
யையநன்குமதித்துரைத்தாயறிஞர்சூடாமணிநீயே
வெய்யபெரும்போராற்றிடினும்வெற்றிசொள்வேனொருகணத்தென்
செய்யவல்லாளொருபேதையென்றுநகைத்துச்செப்பினான். (௪௨)

வல்லையதுசெய்யென்றுமுனிவரனுண்மகிழ்ந்துவிடைகொண்டான்
மல்லல்விளக்குந்திணிதோளான்வயவரானோர்தமைநோக்கி
யொல்லைமதுபெரும்படையோடொருங்குசென்றுகாளியம
ரெல்லைபடைமின்யாமும்விரைந்தெய்துவாமென்றார்த்தெழுந்தான். (௪௩)

இறைவனுரைத்தமொழிப்படியேயெழுகபடையென்றுறவியவ
ரறையுமுரசமெருக்குதலுமாங்காங்குள்ளமதகளிறு
நிறையுங்கவினவாம்பரியுநெருங்குகொடிஞ்சிப்பொற்றேரும்
பிறையுஞ்சமழ்க்குமெயிற்றவுணர்குழுவுமெழுந்தபெருங்கடல்போல். (௪௪)

எட்டிமுகிலைத்துதிக்கைவளைத்திறுகப்பிழிந்துநீர்குடிப்ப
கிட்டிமருப்பாற்றிசையானைகீளப்பொதிர்ப்பமால்வரையை
முட்டியருகுசாய்த்திடுவமுருகுவிரிகற்பகக்குளகு
ஈட்டியெனக்கொள்வனவுலகங்கலங்கவெழுந்தமால்யானை. (௪௫)

பற்றார்முடிமேற்குரமழுந்தப்பதிப்பவுததியோரேழும்
பொற்றார்புலம்பத்தாவுவபல்புவனமுழுதுமுழிதருவ
சுற்றார்தாவல்லிடிமாரிசொரியுமேனுந்துளக்கறுவ
கற்றாராலுமதித்துணையாக்கடுப்பிற்படர்வவாம்பரியே. (௪௬)

முடியால்விசும்பைப்பொதிர்த்திடுவமுழக்கான்முகிலையடக்கிடுவ
வடியானிலனைப்பிளந்திடுவவச்சால்வரையைப்பொடித்திடுவ
கடியாலினனைமழுக்கிடுவகடுப்பாற்காற்றைத்துடைத்திடுவ
கொடியால்வெளியைமறைத்திடுவகூடாரஞ்சுங்கூவிரமே, (௪௭)

இடியுங்கனலுங்கொடுவிடமுமேகவுருக்கொண்டனநீரார்
படியும்விசும்புநிலைகுலையப்பரவையேழுங்குடித்தெழுவார்
கடியுஞ்சினக்கூற்றெதிர்ந்தாலுங்கலங்காரருளற்றுழிதருவார்
மிடியுந்துயருமுலகுறுத்தும்வெய்யோர்வெய்யவாள்வீரர். (௪௮)

தானக்களிறுசுறவாகத்தாவும்புரவிதிரையாக
மானக்கொடிஞ்சிப்பொலந்திண்டேர்வயங்குஞ்சிதைப்பர்ரதியாக
வானத்தவர்தம்பகைவீரர்வருமீனெறியுமவராக
வீனக்கொடியோன்பெரும்படைதானெழுந்துகடலிற்படர்ந்ததே. (௪௯)

இன்னவாறுபடையேகவெழுந்தசண்டாசுரன்புனலுண்
முன்னமூழ்கியுண்டுடுத்துமுடிகுண்டலமாதிகளணிந்து
பன்னவரியபடைக்கலங்கள்பலவுமாராய்ந்தனனெடுத்துப்
பொன்னங்கொடிஞ்சிநெடுந்திண்டேரிவர்ந்தான்சங்கம்புயன்முழங்க. (௫௦)

ஆர்த்தமுரசுமுழவுப்பணையார்த்தபணிலம்வயிர்பீலி
யார்த்தவயவரணிந்தகழலார்த்தவிறற்றோள்புடைக்குமொலி
யார்த்தவளைந்தவெஞ்சிலைநாணார்த்தபுழைக்கைமால்யானை
யார்த்தகடுப்பின்வாம்புரவியார்த்தபலவுமடங்காதே. (௫௧)

கண்டான்வீணைத்திருமுனிவன்கடிதுபடர்ந்துகாளிமுனந்
தொண்டானிறைஞ்சியெழுந்துவலிதோலாத்திறல்சால்வீரரொடு
மண்டாநின்றபடைநெருங்கவந்தான்வானோர்புலஞ்சாய்த்த
சண்டாசுரனீபோர்க்கெழுதிதாழாயெனக்கூறினன்போனான். (௫௨)

வேறு.

முனிவரனுரைத்தவார்த்தைகேட்டுவெந்துமுகிழ்நகையரும்பினளிருந்தா
ளணிவளமடியார்பெறவருள்பெரியநாயகியுயிர்த்தமாகாளி
வனிதையர்பலருமொய்யெனவெழுந்துவட்டுடையணாயுறப்புனைந்து
கனிபிருட்கூந்தனுண்கொடுவரிந்துகச்சிறுக்கினர்முலைமறைய. (௫௩)

பரிசையும்வாளும்பற்றினர்சில்லோர்பகழிசால்கூடுவெந்நசைத்து
வரிசிலைகுழையவாங்கினர்சில்லோர்வடித்தவேலேந்தினர்சில்லோ
ரெரிகிளர்ந்தனையபரசுவெஞ்சூலமிருகையுந்தரித்தனர்சில்லோர்
விரிசுடர்க்குலிசமேந்தினர்சில்லோர்விறற்கதைசுமந்தனர்சில்லோர், (௫௪)

இன்னரர்மகளிர்யாவருங்குழுமியெரிகிளர்ந்தெனச்சினமூண்டு
நன்னராதரத்தினிறைவிபொற்றிருத்தாணயந்தனர்தாழ்ந்துதாழ்ந்தெழுந்து
முன்னராடமர்க்குவிடைகொடுத்தருடிமுதல்வியென்றிரத்தலுமனையாள்
சொன்னவாறடைந்தாடுகேசமர்யாமுந்தொடர்ந்தடைகுதுமெனவிடுத்தாள். (௫௫)

கரியிவர்ந்தாருமரியிவர்ந்தாருங்காய்கடுந்தழலுமிழ்செங்க
ணரியிவர்ந்தாருமறுகிவர்ந்தாருமலைதொழிற்பேயிவர்ந்தாரும்
விரிசிறைபறவைமிருகமற்றுள்ளவிழைந்திவர்ந்தாருமாயெவரும்
பரிகரியிரதந்துவன்றியவவுணர்படைக்கடல்கலந்தனரார்த்தே. (௫௬)

புரந்துவந்தடுத்தபாவையராயபகைப்பெருங்கடலினைக்குய்யஞ்
சுரந்துகொண்டிருக்குமன்னுடைப்பவுணர்சுடர்விழிநெருப்பெழநோக்கி
நிரந்தரம்பந்துங்கழங்குமம்மனையுநிகழ்தரக்கோடலையொழித்தே
யரந்தடிபடைகளேந்திவந்தடுத்தீரரிவைமீரெனநகைத்தமர்த்தார் (௫௭)

ஒருகடலொடுமற்றொருகடல்கலந்தாலொப்பெனவிருதிறத்தாரும்
வெருவறக்கலந்தார்வெஞ்சிலைவளைப்பார்விறல்கெழுநாணொலியெறிவார்
பொருதிறற்பகழிபற்பலதொடுப்பார்போகுயர்வரைபொடிபடுக்கும்
பெருவிறற்றண்டஞ்சுழற்றினரடிப்பார்பிறங்குசக்கரந்திரித்தெறிவார். (௫௮)

முகபடாமிழந்துங்கிம்புரிவயங்குமுதுபெருங்கோடுகளிழந்து
மகனிலந்துழாவும்புழைக்கரமிழந்துமடர்நிரியாணமற்றிழந்தும்
புகர்முகமிழந்தும்போகுவாலிழந்தும்புகல்கறைக்காத்திரமிழந்தும்
தகவமருயிரோயிழந்துமிவ்வாறுசலித்தனகலித்தமாலியானை. (௫௯)

கடுநடையிழந்துங்கடுநடையொருநாற்கால்களுமிழந்துநாற்காலேர்
டடுதிறல்படுபாய்த்திழந்துமப்பாய்த்தோடமைவலிமார்பகமிழந்து
மிடுகிலம்மார்போடெற்றுழ்வெரிநிழந்துமிசைத்தவவ்வெரிநொடுமணிகள்
படுபெருங்கலனையிழந்துமிவ்வாறுபட்டனபட்டவாம்புரவி. (௬௦)

கொடிப்பலமுறிந்துங்கொடிஞ்சிகளழிந்துங்குடங்குடைமுதலியவிழந்தும்
வடிமணிசிதர்ந்துங்கிடுகுகள்முறிந்தும்வயங்கியதட்டுசெளுடைந்தும்
படிகிழித்தியங்குகால்பலகழன்றும்பரியநீளச்சுகடெறித்துங்
கடியவிர்செம்பொனுதனம்விரிந்துங்கழிந்தனகலந்ததேரெல்லாம். (௬௧)

தாளொடுகழலுந்தலையொடுமுடியுந்தயங்கியபூணொடுமார்பும்
வாளொடுகரமுமிறுகுறச்செறிந்தவட்டுடையொடுமிடையிடையுந்
தோளொடுதொடையும்விழியொடுகென்னுந்தும்பைமாலிகையொடுபோருங்
கோளொடுகுரலுங்குலைந்தனர்வீழ்ந்தார்கொடியபோரோற்றவல்லவுணர் (௬௨)

வேறு.

புரந்துளைத்தனதுளைத்தனபொம்மல்வெம்முலையைக்
கரந்துளைத்தனதுளைத்தனவட்டுடைக்கவானை
யுரந்துளைத்தனதுளைத்தனவொண்டொடிப்புயத்தைச்
சிரந்துளைத்தனமகளிர்கட்டெவ்வர்வில்விடுகோல். (௬௩)

முறிந்தவாளிகள்முறிந்தனகேட்கம்வடிவாள்
முறிந்தவங்குசமுறிந்தனபிண்டிபாலங்கண்
முறிந்ததோமரமுறிந்தனமுழுக்கதைஞாங்கர்
முறிந்தவெஞ்சிலையிருதிறத்தவர்க்குமொய்போரில். (௬௪)

மலையுருண்டனவெனத்தலையுருண்டனவையக்
கலையுடைந்தனவெனக்கமழரக்குநீரொழுந்த
நிலைகுலைந்தனநிகழறக்கடையெலாமென்னத்
தலையவிந்தனசாடியவவுணர்தந்தானை. (௬௫)

எங்கணுங்குடரெங்கணுங்குருதியெங்கணுமென்
பெங்கணுங்கொழுவெங்கணுநாடியெங்கணுந்தோ
லெங்கணுந்தடியெங்கணுமிருளெங்கணுங்கை
யெங்கணுஞ்சிரமெங்கணுமழன்களாயிறைந்த. (௬௬)

ஆடுகின்றனகுறைத்தலைப்பிணங்களோடலகை
யோடுகின்றனவுற்றநெய்த்தோரொடுமுயிர்கண்
மூடுகின்றனதசைகுடர்வழும்பொடுமூளை
வீடுகின்றனகொண்டமானத்தொடுவீரம். (௬௭)

இன்னவாறிருபடையினும்பெருஞ்சிதைவெய்த
முன்னமேயமர்புரிந்திலமெனச்சினமூண்டு
சொன்னதானவர்தொழுமிறைமகன்றுருவானோர்
வென்னவாவதிவீரனென்பவன்விளைந்தெழுந்தான். (௬௮)

வாங்கினன்கொடுமரத்தினைமால்வரைகுலையத்
தாங்கினனெறிந்தார்த்தனன்சரம்பலதொடுத்தா
னேங்கினாரரமாதர்கள்பலருமெய்த்திருதோள்
வீங்கிநேரொழுந்தார்த்தனள்விறலயிராணி. (௬௯)

இருவர்வார்சிலையுமிழ்தருசிலீமுகமெழுந்து
மருவுவார்கடல்குடிப்பனவரைபொடிபடுப்ப
வொருவுறுதுவிண்பொதிர்ப்பனவுருவுவவையம்
வெருவினார்பலவுலகரும்விளைந்ததுபெரும்போர். (௭௦)

கொடியதானவனாயிரங்கொடுங்கணைகோத்து
நெடியசீரயிராணிமேல்விடுத்தனனிகழும்
படியபல்கணையவையெலாம்பாய்தலற்றொல்லை
யொடியவேவினளத்தொகைப்பகழிமற்றொருத்தி. (௭௧)

தருநறுந்தொடைமிலைச்சியதையலாயிரங்சோ
லொருவன்மேற்றொடுத்தேகினளவுணனுட்சினந்து
வெருவிலாயிரங்கோறொடுத்தவையெலாம்வீழ்த்தான்
பருவமங்கையேவினளொருபிறைமுகப்பகழி. (௭௨)

ஆலமேயெனவதுசினந்தடுத்தலுமடுதிக்
கோலமேயெனவவளொருபிறைமுகக்கொடுங்கோன்
ஞாலமேவிசும்பேயிவைவநடுங்கிடவுய்த்தான்
சாலமேயெனக்கலாய்த்துமாய்ந்தனதளர்ந்திரண்டும் (௭௩)

தீயன்வச்சிரமெடுத்தயிராணிமேற்செலுத்தப்
பாயவச்சிரமேவினளுடல்விழிப்பாவை
யாயமற்றிருபடைகளுநெடும்பொழுதமர்த்துச்
சாயவெய்த்தனவிட்டவர்கைத்தலஞ்சார்ந்த. (௭௪)

கடியவாயிரம்பகழியோராயிரங்கண்ணி
நெடியயானைமேற்செலுத்தினனெடியவாளவுண
னொடியமற்றவையாயிரங்கடுங்கணையுகைத்துக்
கொடியன்றேரினையாயிரஞ்சரங்களாற்குலைத்தாள். (௭௫)

வேறுதேரிவர்ந்தாயிரங்கடுங்கணைவிடுத்துத்
தாறுபாய்களிநான்மருப்பியானையைச்சாய்த்திட்
டேறுசோரிமிக்கொழுகிடவானநாடுடையா
ளேறுகோமலர்மேனியைத்துளைத்தனளிளைத்தாள். (௭௬)

இளைத்ததோர்ந்தனனகையெறிந்தார்த்தனளிருங்கை
வளைத்தவெஞ்சிலையொடுங்கணைமழையொடுமுழிதந்
துளைத்தவான்மடமாதர்களொருங்குவீழ்ந்தவிய
முளைத்ததீயனன்சிறிதுதன்மொய்ம்புகாட்டினனால். (௭௭)

ஈதுநோக்கியவயிணவிகலுழன்மேலிவர்ந்தாள்
சாதுநோக்கியமகளிரைத்தளரற்கவென்றாள்
போதுநோக்கியகைத்தலங்கார்முகம்பொறுத்துத்
தீதுநோக்கியசிலீமுகம்பற்பலசெறித்தாள். (௭௮)

தலையிழந்தனர்சிலர்நறுந்தாரணிதடந்தோள்
மலையிழந்தனர்சிலர்பெருவாரிநின்றன்ன
நிலையிழந்தனர்சிலர்நிலைகுலைதரநிகழ்த்துங்
கொலையிழந்தனர்சிலர்துழாய்வயிணவிசோலால். (௭௯)

ஓடினார்சிலரொளிந்துகொண்டுய்வதற்குறுதே
நாடினார்சிலரொளிந்துமென்னென்றுளைந்து
வீடினார்சிலர்தலையறுபடவிசையொடுநின்
றூடினார்சிலரவுணருளவனதுகண்டான். (௮0)

கண்டவெய்யவன்கடுங்கனலினுமிகக்கனன்று
தண்டமொன்றெடுத்தெற்றினன்வயிணவிதலைமே
லண்டம்விண்டதென்றஞ்சினவதுபொறுத்தனையாள்
கொண்டதண்டவன்றலைப்புடைத்தனள்புவிகுலுங்க (௮௧)

தலைபிளந்ததுதானவன்வெஞ்சினந்தலைக்கொண்
டலைவில்வெஞ்சிலைவாங்கியோராயிரமயுத
மிலைமுகக்கணைதொடுத்தனனார்த்தனனெல்லாங்
கொலைபடப்புயம்பாய்ந்ததுவபிணவிகொதித்தாள். (அஉ)

ஓங்குதேவியார்திருவடியுளங்கொளீஇயொளிகள்
வீங்குசக்கரமெடுத்தனள்பூசித்துவிடுத்தா
ளாங்குவெஞ்சுடரொனப்படர்ந்தவன்றலையறுத்துப்
பாங்குவந்ததுபனிமலர்பொழிந்ததுபடர்வான். (அங)

இறைவன்மைந்தனாருயிர்துறந்தமையுளத்தெண்ணிக்
குறைவில்வெம்படைத்தலைமையோன்வலிகெழுகோரன்
பிறையெயிற்றுவன்றானவர்குழாத்தொடும்பெயர்ந்து
கறைபடக்கதழ்ந்துழக்கினன்கன்னியர்குழாத்தை. (அச)

ஆயகாலையின்மூர்ச்சைதீர்ந்தெழுந்தயிராணி
நீயனோடமரோற்றனடிசாதிசைதிரிந்தார்
பாயவேதிகள்பற்பலவிடுத்தனர்பதைத்துக்
காயமேகினர்மண்ணிடைக்குதித்தனர்கனன்று. (அரு)

இனையவெஞ்சமராடுழிவச்சிரமெடுத்துப்
புனையவல்லவிந்திராணியப்பதகன்மேற்போக்க
முனையவப்படையவன்விடுபடையெலாமுருக்கித்
துனையவேகிமற்றவன்றலைதுணித்துமீண்டன்றே. (அசு)

கோரன்மாய்தலுங்கனகனென்றுரைபெயர்கொண்ட
வீரன்வந்தமராடலும்பிராமியுள்வெகுண்டு
சேரவெம்படைபலவிடுத்தமர்த்தவன்சென்னி
பாரவன்கதைமோதலுந்தலைவிண்டுபட்டான். (அஎ)

மற்றுமுள்ளபல்வீரருமந்திரத்தவரு
முற்றுவெஞ்சமராடினரச்சமிக்குறுத்தார்
பற்றுவெஞ்சினந்தலைக்கொடுவலவைகள்பல்லோர்
சுற்றுநின்றுபல்படைவிடுத்திடவுயிர்தொலைந்தார். (அஅ)

யானையெண்ணிலமுயல்களாலிறுப்புண்டதென்னச்
சேனைவீரருமந்திரத்தலைவருஞ்சேயும்
வானையார்மடமாதராற்றொலைந்தனர்மாற்று
ரூனையார்படையாயென்றுதூதர்சென்றுரைத்தார். (அகூ)

உரைத்தவார்த்தைதன்செவிபுகவுள்ளமிக்குழைந்து
குரைத்தபூணதிவீரனுமாண்டனன்கொல்லோ
வரைத்தசாந்தணிமுலையிளராமரழகென்று
விரைத்ததார்ப்புயச்சண்டன்வெந்தனலெனவெகுண்டான். (கூ0)

கடவுதேரெனப்பாகனுக்குரைத்திடக்காற்றை
நடவுமாறெனநடத்தினனுலகெலாநடுங்கத்
தடவுவார்முலைமடவரலியர்குழாஞ்சார்ந்தான்
புடவியேத்தும்யாழ்முனிவரன்காளிமுன்போந்தான். (௬௧)

பொருவிலாவலிச்சண்டனம்படையினுட்புகுந்தான்
வெருவிலாவிறல்யாளியைநடத்தெனவிளம்ப
மருவிலாபரம்படைக்கின்றுவந்ததென்றெண்ணி
யொருவிலாவடற்காளிநக்கிவர்ந்தனளூர்தி. (௬௨)

வலவைமார்பலர்தாங்கியபடையொடும்வளையக்
குலவைவாயினைநடத்திவெஞ்சண்டன்முன்குறுகக்
கலவையார்முலைக்கன்னியைக்கண்களாற்கண்டா
னுலவையோடுறுவிடமெனத்தேரொடுமுற்றோன். (௬௩)

கண்டகாலையில்வெஞ்சினங்கொழுந்தெழக்கனலா
வண்டம்வாய்திறந்தெனப்புலைவாய்திறந்தறைவான்
கொண்டசிற்சிலவிரும்பிற்குங்குரூஉச்சுடர்மதியத்
துண்டநேர்சிலபல்லிற்குந்துளங்குவேனல்லேன். (௬௪)

காகமேறிடப்பனம்பழம்வீழ்ந்திடுங்கதைநே
ராகவாயுடைந்தவர்சிலரமர்த்துநின்னணியா
மேகவார்குழலார்விடுபடைகளால்வீந்தா
ரேகவீரன்யானவர்களோடெண்ணலையென்றான். (௬௫)

அன்னவாய்மொழிகேட்டலுமவிதருநீப
மென்னவேதலையெடுப்பினோடுனைத்தவையெல்லாம்
பின்னரோரலாங்கூற்றுவன்பிடர்பிடித்திருந்தா
னென்னவோகினுலகெலாமுய்விக்குமிறைவி. (௬௬)

வீரிவாய்மொழிகேட்டலும்வெகுண்டுவெங்கொடியோன்
மூரிவெஞ்சிலைவாங்கினன்முழங்கினனெறிந்தான்
வாரிசூழ்புவிவிண்டதுவானகநடுங்கிற்
றேரியார்த்திடுகளத்திலுற்றவரெலாமுலைந்தார். (௬௭)

கண்டதேவியுங்கைச்சிலைவளைத்துநாணெறிந்தா
ளண்டம்விண்டனவரையெலாம்பொடிந்தனவாழி
யுண்டமேகங்களஞ்சிமிக்குதிர்த்தனவுருமு
விண்டபல்வகைப்புவனமும்விளம்புவதென்னோ. (௬௮)

ஒன்றுபத்துநூறாயிரமயுதமோரிலக்கந்
துன்றுவாளிகளோரோவொருதொடையுறத்தொடுத்துக்
கன்றுமாதனைக்கலக்கினன்கலங்கினரமரர்
வென்றுமேம்படுவாள்வலிவிறலுடைச்சண்டன். (௬௯)

அஞ்சுமாதரையஞ்சலீரெனக்கரமமைத்து
நஞ்சுநேர்கணைதைத்தலினாகியநலிவுந்
துஞ்சுமாகடைக்கணித்தனதொடிக்கையார்பலரும்
பஞ்சவாய்நுதித்துளைவடுக்களுமறப்பட்டார். (௧௦௦)

தனையவாவியயாவருமூறின்றித்தழையப்
புனையவாம்விறற்செல்விகண்டகமகிழ்பூத்துத்
துனையமாற்றலன்பெரும்படையனைத்தையுந்துகள்செய்
தினையவாக்குவன்சண்டனையென்றுகோலெடுத்தாள். (௧௦௧)

கரிகண்மேற்பதினாயிரங்கால்விசைத்தெழுவாம்
பரிகண்மேற்பதினாயிரம்படருருள்பூண்ட
கிரிகண்மேற்பதினாயிரங்கேழ்கிளர்கழற்கா
லரிகண்மேற்பதினாயிரமழற்கணைதொடுத்தாள். (௧௦௨)

மண்ணெலாங்கணைவாரியெலாங்கணைவயங்கு
விண்ணெலாங்கணைதிசையெலாங்கணைமேருக்
கண்ணெலாங்கணைவேறுளவரையெலாங்கணைமற்
றெண்ணெலாங்கணையாயினவெனப்பலவிடுத்தாள். (௧௦௩)

அரவணிந்தவன்கட்டழலெனச்சிலவடுக்கும்
பரவுமற்றவனகைத்தழலெனச்சிலபாயுங்
கரவிலன்னவன்கைத்தழலெனச்சிலகடுகு
முரவுசால்விறற்காளிவெஞ்சிலையுமிழ்வாளி. (௧௦௪)

அழிந்தவாரணமழிந்தனவாம்பரியச்சிற்
றழிந்தகூவிரமழிந்தனவவுணர்தங்குழுக்க
ளழிந்தவேதிகளழிந்தனவூர்திகளனைத்து
மழிந்தவானவர்கட்டமொட்டறக்கடையனைத்தும். (௧௦௫)

வரையெலாம்பிணமண்டியமலர்செறிகானத்
தரையெலாம்பிணந்தாமரையோடைகால்பொய்கை
நிரையெலாம்பிணநெடுங்கழிநெய்தல்வீநாறுந்
திரையெலாம்பிணமாக்கினகாளிவில்செலுத்தே. (௧௦௬)

மருவரக்குநீர்ப்பெருக்கின்மேற்கேடகமறித்து
வெருவில்பேய்க்கணங்கிடத்திமேலிவர்ந்தங்குமிதக்கும்
பொருவிலாக்கழுக்கடைகொடுபோகுமாறுந்துந்
திருவமல்கியபாரிடமெங்கணுஞ்செறிந்தே. (௧௦௭)

பட்டுவீழ்ந்தமாக்கரிச்செவிப்பரிகலந்திருத்திக்
கிட்டுபேய்ப்பிணமூளைவெண்சோறுமேற்கொள
விட்டுமென்றசைக்கறிபலபடைத்திழுதிரத்தம்
விட்டுநன்குபசரிப்பனவாண்மயன்மிசைய (௧௦௮)

திருந்துவன்றடிகொழுவழும்பீருள்வான்செந்நீர்
விருந்துபற்பலகிளையொடும்விரும்பிமிக்குண்டு
பருந்துங்காகமுமெருவையுமேலெழீஇப்பந்தர்
பொருந்துநீர்மையிற்பரப்பனபோர்க்களமுழுதும். (௧௦௯)

தேருமற்றனபெருமதமழைபொழிசெங்கட்
காருமற்றனகடும்பரியற்றனவயவர்
போருமற்றனதனித்தனியுளாப்படுதென்பொருந
ராருமற்றனரொருவனுய்நின்றனனவுணன். (௧௧௦)

துன்றுவெம்படைதொலைந்ததுந்தேவர்தந்தொகுதி
வென்றுமேம்படுவீரர்களொழிந்ததும்விறல்மிக்
கொன்றுவீரிதன்படையொடுபொலிவதுமுணர்ந்து
நன்றுநன்றுநஞ்சேவகத்திறனெனநகைத்தான். (௧௧௧)

ஆயிரங்கணுனலகுகூட்டுண்டவனழன்றோ
ராயிரங்கணையம்மைமேற்றொடுத்துவிட்டார்த்தா
ருயிரங்கணையாயிரங்கணைகளாலறுத்தோ
ராயிரங்கணையவுணன்மேற்செலுத்தினளம்மை. (௧௧௨)

அனையவாளியோராயிரம்வாளியாலறுத்துத்
துனையவானவர்வலியெலாந்தொலைத்ததோர்தண்ட
மினையவேவினன்சண்டன்மற்றதனைத்தன்னியல்கைப்
புனையவாயதண்டாற்பொடிபடுத்தினளம்மை. (௧௧௩)

தண்டமாய்தலும்வெஞ்சினந்தலைக்கொடுசண்டன்
கொண்டன்மாமழைபொழிந்தெனமாயையாங்கொடுங்கோ
லண்டம்யாவையுமுயிர்த்தவளளித்தவண்மறையக்
கண்டயாவருநிலைகலங்கிடக்கதழ்ந்தெய்தான். (௧௧௪)

மாயையாங்கணைபடர்ந்தனகாளியைமறைத்த
வேயையவென்றதோள்வயிணவியாதியர்மெல்வுற்
றுயைநீத்தழுமழவெனப்புழுங்கினரழுதார்
பேயையவன்கொடியேற்றிஞண்மற்றதுபேணி. (௧௧௫)

ஞானவாளியைவிடுத்தனண்மாயைபோய்நசித்த
தானமில்லெனத்தெரிந்துமிக்குவந்தனருலகோர்
மானநாயகிதிருவுருவாட்டியதிறத்தா
லானவவ்விடந்தனையுருவாட்டியென்றறைவார். (௧௧௬)

விடத்தைநேர்பவன்மெய்யெலாந்துளைபடவிசிகங்
குடத்தைநேர்முலைதொடுத்தனள்யாவருங்குழுமி
நடத்தையாற்றிமங்கலநணிநவின்றனரனைய
விடத்தைமங்கலமென்றுரைசெயுமுலகின்னும். (௧௧௭)

விரவுவெஞ்செருப்புரிந்தபேரிடமெலாம்விளங்கப்
பரவுமிங்ஙனமொவ்வொருகாரணம்பற்றி
யுரவுசால்பெயருரைப்பர்வாரிதிவளையுலகோர்
புரவுமேயவவ்விடந்தொறும்பொலிவன்னமாகாளி. (௧௧௮)

மெய்யடங்கலுந்துளைபடவெஞ்சினங்கொண்டு
பொய்யடங்கலுமுள்ளவன்புகுத்தினன்வானிற்
செய்யடங்கலுமுள்ளதன்றேரதுநோக்கி
மொய்யடங்கலுமோருருக்கொண்டனன்முதல்வி. (௧௧௯)

தன்னதூர்தியுஞ்செலுத்தினளாவயிற்சமர்த்தா
ரென்னகூறுதுமிருவர்தம்போர்த்திறமெல்லா
நன்னராய்ந்துணர்த்திடுபவர்ஞாலத்துமுளரோ
பன்னருங்கடுப்பொடுசுழன்றனர்பலவிடமும். (௧௨௦)

விண்ணிற்சூழுவமேருவிற்சாருவதிசையின்
கண்ணிற்பாய்வனகடலினும்புகுவனகருது
மெண்ணிற்சீர்த்தவல்வினைவொடுமிங்ஙனமுழன்று
மண்ணிற்சார்ந்தனவிருவரூர்தியுமுன்போல்வயங்கி. (௧௨௧)

வையமேவலுங்குமரிவெஞ்சினக்கொடுவலிசால்
வெய்யபாளியைமற்றவன்றேர்மிசைச்செலுத்தி
யையபாகனைப்பரிகளைவாளெடுத்தடர்த்துச்
செய்யநீர்ப்பெருக்கெழத்தலைகீழ்விழச்செய்தாள். (௧௨௨)

ஊரும்வையமற்றூர்தராவையமுற்றுரவோன்
யாருமச்சுறவெஞ்சிலைவளைத்தனனதனைத்
தேருமுன்னரவ்வாள்கொடுதொலைத்தனள்செல்வி
பாரும்விண்ணமுநடுங்குமோர்சக்கரம்பரித்தான். (௧௨௩)

அந்தச்சக்கரஞ்சுழற்றிமேலெறிந்தனனதுபோ
திந்தச்சக்கரமென்னதேயென்றுகையேற்றாள்
சந்தச்சக்கரங்கழிதலுந்தோமரந்தரித்தான்
முந்தச்சக்கரப்பகைவனைமுருக்கியமூர்க்கன். (௧௨௪)

அன்னதோமரந்தன்னையும்வாளினாலறுத்தா
ளன்னசெய்துமென்றெண்ணியோர்வரைபறித்தெழுந்து
முன்னர்வந்தனனதையொருதன்னடினான்மோதிப்
பின்னமாக்கினளுலகெலாம்பெற்றவள்பெற்றாள். (௧௨௫)

படையெடுத்தமராடலென்மேற்சென்றுபற்றி
யடைதரச்சினந்துயிருண்பனெனச்சினந்தடுத்தா
ளுடையநாயகிபதநினைந்தொய்யெனவொருதன்
புடைவிராவுவெஞ்சூலத்தையேவினள்புரப்பாள். (௧௨௬)

கொடியநஞ்செனக்கூற்றெனக்கொடுந்தழலென்னக்
கடியசூலஞ்சென்றவனுரந்துளைத்துயிர்கவர்ந்து
படியவாங்கடன்மூழ்கிவான்மலரினும்படிந்து
நெடியகாளியையடுத்ததுபுவிமகிழ்நிரம்ப. (௧௨௭)

பற்றிவெங்கொலைச்சண்டனைப்படுகளத்தவித்து
வெற்றிமேவியவிடத்தினைவெற்றியூரென்பர்
முற்றியாவரும்வணைந்தனர்சோபனமொழிந்தார்
கொற்றிமற்றவனூரழித்திடும்படிகூறி. (௧௨௮)

அழித்துவந்தவர்தம்மொடுங்கானப்பேரடைந்து
செழித்துநின்றருடம்பிரான்சேவடிசேவித்
தொழித்துவெம்பகையுய்ந்தமாதர்களொடுமுவகை
கொழித்துமீண்டனள்கண்டதேவிப்பதிகுறுக. (௧௨௯)

வாவிசூழ்கண்டதேவியுண்மகிழ்ந்துவந்தடைந்து
தேவியார்திருவடிதொழுதெழுந்தனள்செல்வி
காவிநேர்தருங்கண்ணியர்பலருமுட்களிந்து
பாவிவேங்களுய்ந்தனமெனப்பன்முறைபணிந்தார். (௧௩௦)

பணிந்தமாதர்கள்பலரையுந்தேவியார்பார்த்துத்
துணிந்தபேரருள்செய்திடத்தொழுதெழுந்திருந்தா
ரணிந்தபெண்ணுருவாயினோர்யாவருமாங்குத்
திணிந்தவாணுருவாதல்பெற்றகமகிழ்சிறந்தார். (௧௩௧)

முன்னுமாதவத்துயரியசவுநகமுனிவ
மன்னுவெந்திறற்சண்டனைவதைசெய்ததிதுமேற்
பன்னுதம்பிரான்பெரியநாயகிக்கருள்பண்பி
னுன்னுமற்புதங்கேளெனவுரைத்திடுஞ்சூதன். (௧௩௨)

சண்டாசுரன்வதைப்படலம்முற்றிற்று.

ஆ படலம் ௮ - க்கு திருவிருத்தம்—௫௪௪.

---

## திருக்கலியாணப்படலம்.

சிறுமருதடவிமேயசிற்றிடையெம்பிராட்டி
மறுவறுகருணையாலேவானவர்பகைவனாய
தெறுதொழிற்சண்டன்மாயச்செறித்தனவுலகமெல்லா
மூறுமகமாகியாவும்பொலிந்தனவூறுதீர்ந்தே. (௧)

பேசுபல்லுலகுமீன்றபெரியநாயகியென்பாண்மற்
றேசுதீர்ந்துயிர்கள்செம்மையடைந்ததின்மகிழ்ந்தாளேனு
மாசுபேரன்புவாய்ந்தோர்முன்னத்தின்வழியேநிற்குந்
தேசுசால்கொழுநற்காணுக்கவலையுஞ்சிந்தையுள்ளாள். (௨)

பண்டுபோலெழுந்துமேல்பாற்பயில்சிவகங்கைமூழ்கி
மண்டுபேரன்புபொங்கமலர்முதலாயயாவுங்
கொண்டுவன்மீகம்போற்றிக்குறித்தமரிருக்கைசார்ந்து
விண்டுவாதியர்சானானைமிகநினைந்திருந்தாளன்றே. (௩)

நினையாரைநினையானாகிநினைப்பாரைநினையாநிற்கு
நனையாரைவேய்ந்தமோலிநாயகன்கருணைபூத்து
முனையாரைமுனையாவென்றிமுழுவிடைமேற்கொண்டெங்க
ளனையாளையருளவந்தானம்மருதவனத்தம்மா. (௪)

கறையகலகத்துக்காட்சிகழிதரப்புறத்தேதோற்று
மிறைதிருக்காட்சிநோக்கியெழுந்திருகைகள்கூப்பி
மறைமுடிக்கரியபாதமலர்மிசைத்தொழுதுவீழ்ந்து
குறையறக்களித்தெழுந்துகோற்றொடிதுதிக்கலுற்றாள். (௫)

பாரிடையைந்துமாகிப்பாருமாய்நின்றாய்போற்றி
நீரிடைநான்குமாகிநீருமாய்நிகழ்வாய்போற்றி
போரிடையழலின்மூன்றாயழலுமாய்ப்பொலிவாய்போற்றி
தேரிடைவளியிரண்டாய்வளியுமாய்த்திகழ்வாய்போற்றி. (௬)

வெளியிடையொன்றேயாகிவெளியுமாய்விளைந்தாய்போற்றி
யளியுயிர்க்குயிருமாகியுயிருமாய்விரவாய்போற்றி
தெளிபுவிபுனறீகால்வான்செஞ்சுடர்மதியான்மாவென்
றொளிசெயெட்டுடம்புபெற்றுமுடம்பொன்றுமில்லாய்போற்றி. (௭)

தொழில்களோரைந்துசெய்துந்தொழிலொன்றுமில்லாய்போற்றி
யெழில்செயெற்கலந்திருந்தும்விகாரமொன்றில்லாய்போற்றி
பொழில்களோரீரேழாயும்பொழில்கடந்தவிர்வாய்போற்றி
விழிலெழுந்தெழிலழுந்திமிளிர்ந்துமவ்வில்லாய்போற்றி. (௮)

காரணமெவைக்குமாயுங்காரணமில்லாய்போற்றி
யாரணமுடிவிருந்துமதற்கறிவொண்ணாய்போற்றி
நாரணன்பிரமராயுநயந்தவர்காணாய்போற்றி
பூரணமுதல்வபோற்றிபுண்ணியப்பொருளேபோற்றி. (௯)

பிறையவிர்சடையாய்போற்றிபிறங்குவெள்விடையாய்போற்றி
கறையவிர்களத்தாய்போற்றிகருதுநருளத்தாய்போற்றி
யறைமழுவலத்தாய்போற்றியற்புதநலத்தாய்போற்றி
மறைநவில்சனத்தாய்போற்றிமருதமர்வனத்தாய்போற்றி. (௧௦)

என்றுநெஞ்சுருகக்கண்ணீரிறைத்திடத்துதியாநிற்குங்
குன்றுவெம்முலையினாளைக்குழகனாரருளினோக்கி
யொன்றுவல்விடையினின்றுமிழிந்தருகுற்றுப்பின்பா
னன்றுதைவந்திளைத்தாய்நற்றவம்புரிந்துநீயே. (௧௧)

இருளெனப்படுகூந்தான்மற்றிலகுறுநமக்குநம்பே
ரருளெனப்படுநினக்குமறக்கடையில்லையேனும்
பொருளெனப்படுபேரன்பிற்பூசித்துப்புவனமுய்வான்
றெருளெனப்படுமிப்பூசைசெய்யெனச்செப்பினேமால் (௧௨)

சொல்லியவாறேநீயுஞ்சுருதியின்முழக்கமாறா
நல்லியலினையதானநன்னிநீநோற்றாயற்றாற்
புல்லியபாவமுற்றும்போயதுபுனிதமுற்றா
யல்லியங்குழலாய்நம்பாலவாம்வரம்பெறுதியென்றான். (௧௩)

வளவிடைப்பிரானிவ்வாறுவாய்மலர்ந்தருளப்போற்றி
யிளமகப்பிணிக்கின்றாளேமருந்தயின்றிடுதலெண்ணி
யுளமகிழ்பூப்பவெல்லாவுயிர்களுமுய்யுமாற்றாற்
றளரிடையெம்பிராட்டிவரங்கொளச்சமைந்தாளன்றே. (௧௪)

இத்தலநாமஞ்சொற்றோரித்தலமுளஞ்சிந்தித்தோ
ரித்தலந்தரிசித்தோர்மற்றித்தலம்வசித்தோர்நாளு
முத்தலம்புகழவாநின்சாலோகமுதலோர்நான்கு
முத்தலமருநீர்வேணியாய்முறையுறுதல்வேண்டும். (௧௫)

மறையுணர்ந்தவரைச்செங்கோன்மன்னரைவணிகர்தம்மைக்
கறையில்சூத்திரரைத்தந்தைதாயரைக்கடும்பைப்பிள்ளைப்
பறைதருபாவைமாரைப்பசுக்களைவதைத்தபாவ
மிறைவநின்றரிசனத்தாலித்தலத்தொழிதல்வேண்டும். (௧௬)

மேயவித்தலத்தைச்சார்ந்துவிளம்புநின்கோயிலாதிப்
பாயமல்பணியுமாற்றிப்பகர்தருபூசையோடு
மாயவுற்சவமுநன்குசிறப்பிப்போரவனியாண்டு
மாயவன்முதலோராய்ப்பின்னின்பதமருவல்வேண்டும் (௧௭)

ஒருதமியேனன்றாற்றுமுயர்சிவகங்கைதோய்வார்
கருதருங்குட்டமாதிக்கடும்பிணியனைத்தும்பற்றிப்
பொருதலைத்திடும்பேயாதித்துன்பமும்பொரிந்துபோக
மருதமர்பிரானேயெல்லாவளங்களும்பெறுதல்வேண்டும். (௧௮)

பலவுரைத்திடுவதென்னைபற்பலநாளுமிந்தத்
தலனடைதவத்தினோர்க்குன்றாட்பிழையொன்றுநீங்க
வலனுயர்கொடியவாயபாதகமனைத்துமாய்ந்து
புலனனிசிறந்தோராயெப்போகமும்பெறுதல்வேண்டும். (௧௯)

ஆன்றவன்மீகநின்றுமருட்குறிவடிவம்யார்க்குந்
தோன்றநீயருளல்வேண்டுந்தொழுதுபல்லுயிருமுய்ய
மான்றவென்றனைநீயின்னேவதுவைசெய்தருளல்வேண்டுஞ்
சான்றவெண்குணத்தாயென்றாளுலகெலாமீன்றதையல். (௨௰)

அம்மைவாயுரைத்தவார்த்தையடங்கலுஞ்செவியினேற்றுச்
செம்மைசான்மேனியம்மான்றிருமுகமலர்ச்சிகாட்டி
மும்மையாருலகுமுய்வான்முயன்றனையனைத்துநன்று
கொம்மைவாரணிந்தகொங்கைக்கோற்றொடிமடந்தாய்கேட்டி. (௨௧)

நாடுவன்மீகநின்றுநம்மருட்குறிபின்றோன்று
மாடுபாம்பனையவல்குலாயிழாயதான்றுமற்றை
நீடுபல்வரமுமின்னேபெறுகெனநிகழ்த்தினனுட்
கூடுமோகையளாயுய்ந்தேனென்றுகைகுவித்தாளம்மை. (௨௨)

அன்னதுகண்டவேந்தனயனரிமுதல்வானுட்
றொன்னருமுய்ந்தோமுய்ந்தோமென்றுதாள்பணிந்தெழுந்தார்
மின்னகுகுலக்காளிவிரைமலர்ப்பாதந்தாழ்ந்து
பொன்னவிர்சடையாயிந்தத்தலத்தில்யான்பொலிதல்வேண்டும். (௨௩)

என்னைவந்திப்போர்நாளுமெண்ணருஞ்செல்வத்தாழ்ந்து
முன்னைவல்வினையினீங்கிமுனைகடும்பாதிமல்க
வன்னையினருண்மிக்கோராயலங்குறவேண்டுமென்றாள்
பொன்னேர்சடையானவ்வாறாகெனப்புகன்றுவிட்டான். (௨௪)

அவ்வரம்பெற்றகாளியத்தலவடபாற்கோயிற்
செவ்விதிற்கொண்டுமேவிச்சேவித்துப்போற்றுவாருக்
கெவ்வமுற்றொழித்துநாளுமிட்டகாமங்கைகூடி
யொவ்வவெவ்வரமும்பாலித்துறும்பிரசன்னமாயே. (௨௫)

பொங்குமங்கலங்களெல்லாம்பொலிதரவெவர்க்குநல்கி
யங்குமங்கலமாய்நாளுமமர்கின்றாடன்னைவானோர்
தங்குமங்கலமுண்டாகத்தழைதிருமேனிமுற்றுங்
குங்குமங்கலவச்சாத்திக்குங்குமகாளியென்றார். (௨௬)

அவணிலையன்னதாகவயன்முதலாயவானோர்
தவமலியம்மைவேண்டத்தம்பிரானிசைந்தவாறே
கவலரும்வதுவையாற்றக்கடைப்பிடித்துவகைபொங்க
வுவமையின்றுய்ந்தோநாமென்றொருங்கனைவருந்தொக்காரே (௨௭)

முருகியலன்பிற்கஞ்சனியவரைமுன்னர்க்கூவிப்
பெருகியவனப்புவாய்ந்தபெரியநாயகியம்மைக்கு
முருகியமனத்துமேவுமொருசிறுமருதூரர்க்குந்
திருகியமனத்தர்காணாத்திருமணநிகழ்தலாலே. (௨௮)

காதலமருங்கும்பக்கொங்கையரோடாடவர்களீண்ட
மீதலமருங்குந்தெண்ணீர்விரிதிரைக்கடலுடுத்த
பூதலமருங்குஞ்சென்னிப்பொலிமணியுடையார்மேய
பாதலமருங்குஞ்சென்றுபடர்முரசறைதிறொன்றான். (௨௯)

என்றலுமுவகைமீக்கொண்டியலருட்டலைமைபூண்டார்
நன்றமர்புனலுண்மூழ்கிநல்லனதுய்த்துடுத்து
வென்றபல்லணியணிந்துவெய்யவெங்களிறுபண்ணி
யொன்றமற்றதன்மேலேற்றினாரிப்பெருமுரசிட்டேறி. (௩௰)

வாழியகுணில்கைக்கொண்டுவாழியசெருத்தலாக்கள்
வாழியமறையுணர்ந்தோர்வாழியவேள்விச்செந்தீ
வாழியமழைபெய்வானம்வாழியவுயிர்களெல்லாம்
வாழியசைவநீதிவாழியமன்னர்செங்கோல். (௩௧)

சிறுமருதூரின்மேயதேவதேவனுக்குமன்பிற்
பெறுமொருசிறுமருங்குற்பெரியநாயகிக்குமன்ற
லுறுவதுகாணயாருமொல்லையினணிந்துகொண்டு
மறுவறுசிறப்புமேவவம்மினென்றெருக்கினானே. (௩௨)

எருக்கியமுரசங்கேளாயாவருமுளத்துமேன்மேற்
பெருக்கியவுவகைதுள்ளப்பெறலரும்பேறும்பெற்றோ
முருக்கியவினைஞரானோமூழ்கினமின்பத்தென்று
தருக்கியதன்மையோராய்த்தம்முளெக்கழுத்தமுற்றார். (௩௩)

தண்டகநிழற்றுங்கற்பதருவுறையமரர்வேந்து
முண்டகமலரின்மேயமுதல்வனுமுருகுவெள்ளம்
வண்டகங்குடையவூற்றும்வனத்துழாய்மாலைத்தேவு
மெண்டகமற்றையோருமிருங்களிபயப்பச்சூழ்ந்து. (௩௪)

விச்சுவகன்மற்கூவிமெல்லியலுமைக்கும்வேத
வச்சுவப்பெருமானுக்குமருங்கடிநிகழ்தலாலே
மெச்சுவமானமின்றிவிளங்குமண்டபங்களாதி
யெச்சுவர்க்கமுமோகிக்கவியற்றுதிகடிதினென்றார். (௩௫)

வேறு.

என்றபொழுதகத்துவகையெய்தநனிமுகமலர்ந்து
மன்றவருவிக்கினங்கண்மருவாதுமுடிவெய்தி
யொன்றவலம்புரிக்களிற்றையுரைக்குமனுவாற்போற்றி
நன்றமைமண்டபமாதிநவிற்றிடலுற்றான்மயனே. (௩௬)

கருங்கடன்மேற்பலபரிதிகாலூன்றிநின்றாற்போ
லொருங்குமணிக்குறடியற்றியுதன்மீதுசெம்மணித்தூ
ணொருங்குபலப்லநிறுவிநின்றபரிதிக்கிறைமே
லருங்குலைத்தென்றிடக்கிடந்தாலனபொற்போதிகைகிடத்தி. (௩௭)

மீதுமதிகிடந்ததெனவெள்ளியவுத்திரம்பொருத்திக்
கோதுதவிரம்மதிமண்டலத்திறைமேற்குலாயதெனப்
போதுமரகதப்பலகைபொருந்திடவெங்கணும்பரப்பி
யோதுகனலெனத்துகிர்விமானமேலுறவமைத்து. (௩௮)

அந்தவொளிமண்டலத்தக்காசமேலமர்ந்ததெனச்
சந்தமலிசெம்மணிசெய்தசம்புமேலுறவமைத்துச்
சுந்தரமார்நாற்புறத்துஞ்சோபானமியற்றியதிற்
பந்தமுறவிவ்விரண்டுபக்கமும்யாளிகணிறுவி. (௩௯)

அத்தகையமண்டபச்சுற்றருகுமுழர்தாழ்ந்திருப்ப
வெத்தகையமண்டபமுமிதற்கிணையாகாவென்ன
முத்தகையவுலகடங்கமொய்த்திடினுமிடங்கிடப்ப
வித்தகையதெனப்புசறந்கியலாமண்டபமொன்று. (௪௦)

ஒளிவளர்பொற்குறட்டுமிசையுறுவயிரக்காணிறுவித்
தெளிவளர்செம்மணிப்போதிசெறிதருநீளுத்திரங்கள்
வெளிவளர்மேதப்பலகைமேதினிநீரழலுழலும்
வளிவளர்வானடுக்கென்னமாண்புபெறும்படியியற்றி. (௪௧)

பித்தியும்பொற்சாளரமும்பிறங்கியொளிர்நிலைப்புதவு
மொத்தியல்பல்கொடுங்கைகளுமொள்ளியபொன்னரிமாலை
சித்தில்மாலிகைபவளமாலைநிகழ்மணிமாலை
கொத்தியல்பூமாலைமுதல்யாவுமெழில்கொளப்பொருத்தி. (௪௨)

அன்னமயில்கிளிபூவையான்றகபோதகமுதலா
வென்னபறவையும்பொலியவிணர்மலராதிகணெருங்கி
வன்னமிகச்சித்திரித்தவான்பட்டுவிதானித்துப்
பொன்னமையுமாதனகம்பலம்பொலியக்கீழ்விரித்து. (௪௩)

இருவகைமண்டபஞ்சூழவியைந்தபெருவெளிமறையத்
திருநிலைகாவணமிட்டுத்தெங்கிளநீர்பைங்கரும்பு
பொருவருதாற்றுக்கதலிபூம்பிணையன்முதலாக
வொருவருபல்லலங்காரமுலகம்வியப்புறப்புரிந்து. (௪௪)

அன்னகாவணஞ்சூழவைந்தருவும்பணிசெய்யப்
பன்னகாபரணர்திருவருள்போலும்பதஞ்செய்யச்
சொன்னமாமணியாகிதுலங்குபலவிதத்தமைந்த
தென்னவாமிளஞ்சோலைதேவர்புலங்கொளப்புரிந்து. (௪௫)

ஆயகாவணஞ்சூழவழகுபொலிநான்மறுகு
மேயவிருபான்மாடமாளிகையும்விண்டடவத்
தேயமெலாஞ்சிறிதென்றுசெப்பவிடங்கொளப்புரிந்து
பாயதோரணமுதலாப்பலவலங்காரமுஞ்சமைத்து. (௪௬)

நாற்புறமுஞ்சோபானநயந்தநறுநீர்வாவி
யேற்புறநாற்றிசையிடத்துமின்டையாதிகண்மலர்ந்து
தாற்புறமிலிலக்கணத்திறேன்மையதுகொளச்சமைத்து
மாற்புறங்கண்டிடும்வறுவைமண்டபத்தினடுவாக. (௪௭)

நாடுமறைமுதல்பெரியநாயகியோடினிதமரப்
பாடுமுடங்குளைமடங்கல்பலசுமந்தமணிப்பீட
நீடுவனப்புறவிட்டுநிகழ்பவளக்காலூன்றி
மாடுசெறிமணிவிளங்கவளர்விமானமுஞ்சமைத்து. (௪௮)

சுற்றமையுங்கொடுங்கைதொறுந்தூக்கியநித்திலமாலை
முற்றமையுமிருண்மேய்ந்துமுழுநிலாக்கதிர்காலப்
பற்றமையுமத்தலைசயமைப்பொனணைக்கெதிராக
மற்றமையும்வேதியுங்குண்டமும்பிறங்கும்வகைபுரிந்து. (௪௯)

விரவுபுவியிடத்தவர்கண்மிகநோக்கியிமையாரா
யுரவுசெறிசுராகவும்பர்களுமுறநோக்கி
விரவுதிருவடியின்பமேவியவரோயாசப்
பரவுசிவலோகமெனும்படியழகுபெறச்சமைத்தான். (௫௰)

வேறு.

பெருகியவனப்பிற்சமைத்தகல்யாணப்பிறங்குபொன்மண்டபச்சிறப்பை
யுருகியமனத்தின்யாவருநோக்கியுவந்தனர்மற்றதனூடு
முருகியகளிப்பினியவர்களறைந்தமுரசொலியகஞ்செவிநிறையப்
பருகியவொருமூன்றுலகினுள்ளாரும்பரந்ததிவிணாந்துசென்றடைவார். (௫௧)

மருவியவாடகேசர்கூர்மாண்டர்வயங்கியபுத்தியட்டகர்தோ
மொருவியகாலாக்கினியுருத்திரர்பூவுறைபவன்புரூரநள்ளுதித்தோர்
வெருவியவவரால்விதித்திடப்பட்டோர்விளங்கொருகாலுருத்திரர்தீப்
பொருவியசூலகபாலத்தராகிப்பொலிதருவயிரவர்முதலோர். (௫௨)

வானவர்மகவான்மலர்த்தலையுறைவோன்வண்டுழாய்த்தொடைப்புயமாயோன்
ஞானவரியக்கர்சித்தர்கிம்புருடர்சாரணர்வித்தியாதரர்க
ளானவர்செழுங்கந்தருவர்கின்னரர்மற்றுசைகாப்பாளர்வல்லரக்கர்
மானவர்பரிதிமதியுறுகோணூண்மாதவமுனிவரர்முதலோர். (௫௩)

அரமடந்தையரேயவிர்புலோமசையேயையவெண்டாமரைமகளே
வரமிகுதிருவேயருந்ததிமுதலாமாதவமுனிவர்பன்னியரோ
பரவியநாகநாட்டுமங்கையரோபற்பலபுவிமடந்தையரோ
விரவியமற்றைக்கருநெடுந்தடங்கண்வெண்ணகைச்செய்யவாயினரோ. (௫௪)

அனைவருநெருங்கித்தோளொடுதோளுமழுகியமுடியொடுமுடியும்
புனைவருகழற்காலொடுகழற்காலும்பூணணிமார்பொடுமார்பு
மினைவருமடந்தைமாரொடாடவருமிறுகிமிக்குரிஞறப்புகுந்து
நினைவருமனையர்தகுதியினிருந்தார்நின்மலன்மணவணியுளப்பாம். (௫௫)

வேறு.

கடிமலர்த்தவிசிறைனுங்கண்ணியந்துளவினானு
முடிவிலாமுதல்வன்பாதமுன்சென்றுவணங்கிப்போற்றி
யொடிவின்மஞ்சனஞ்செய்சாலையுள்ளெழுந்தருளவேண்டு
மடிகளோவென்னவயனலர்முகமுறுவல்பூத்து. (௫௬)

மாயவனெடுத்துவைக்கும்பாதுகைமலர்த்தாள்சேர்த்துத்
தூயபட்டமைந்தமுன்கையிருவருந்துணைந்துநீட்டச்
சேயகைக்கமலம்வைத்துத்திருத்தகநடந்துசென்று
பாயமஞ்சனஞ்செய்சாலையுட்புக்கான்பரமயோகி. (ருஎ)

மறைமுடியென்றுந்தூயமாதவருள்ளமென்று
மறைதருமொருபொற்பீடத்தமர்ந்தினிதிருக்கவேத
னிறைசிவகங்கைத்தெண்ணீர்நிலையுறும்படிபூரித்த
குறைவில்பொற்குடங்கையேந்தியாட்டினான்குளிரமாதோ. (ருஅ)

நுழையிழைக்கலிங்கங்கொண்டுநோக்குடைத்திருவாழ்மார்பன்
மழைமிடற்றடிகண்மேனிமெல்லெனமருவவொற்றக்
குழையுடைச்செவியாலாலசுந்தரன்குறுகிநீட்டும்
பிழையில்வட்டகைவெண்ணீறுபிறங்குறநுதலிற்சாத்தி. (ருகூ)

மன்னியவரைநாண்பட்டுக்கோவணமாயோனிட்டத்
துன்னியவீரமாந்திமற்றவைசூழச்சேர்த்து
மின்னியசெம்பொற்பன்னூல்விளிம்புசெய்வெண்பட்டாடை
முன்னியவரைப்பின்போக்கிமுகிழ்த்தழகெறிப்பச்சாத்தி. (சு0)

வடதிசைத்தலைவனீட்டமாயவனுவந்துவாங்கிப்
படவரவாடிச்சீறும்பண்பிவணுகாதென்னுங்
கடன்மதித்தடக்கல்போலுங்கங்கையைமறைத்தல்போலு
மடர்மணியிழைத்தசெம்பொன்னவிர்முடிமுடியிற்சேர்த்து. (சுக)

கடிமணப்பணிகணேக்கக்காதல்செய்முகநாட்டம்போற்
பொடியணிநுதலினுப்பட்பூத்தகண்டிறவாவண்ணம்
படிதரக்கட்டும்பட்டப்பண்பெனப்புனைபொற்பட்டத்
தொடிவில்பன்மணியும்வாரியுண்டிருளனுக்கச்சேர்த்து. (சுஉ)

படுகடலுலகமேத்தும்பாண்டிநாடாளுஞ்சீருந்
தொடுசிலைமதவேண்மேனிசுண்ணஞ்செய்திட்டசீரும்
வடிவறவிளக்கியாங்குமாண்பிலேன்மொழிபுன்பாட்டு
மிடுபெருஞ்செவியினுலமகரகுண்டலங்களிட்டு. (சுங)

பன்மணிபொலியுஞ்செம்பொற்பருப்பதந்தனைக்குழைத்த
வண்மையைமதித்துமிக்கவன்மையுற்றடைந்தவீங்குந்
தன்மையைத்தடைசெய்தென்னத்தவாப்பலமணிகால்யாத்த
புன்மையில்பொற்கேயூரம்புயவரைபொலியச்சேர்த்து. (சுச)

வெருவரவுலகமெல்லாம்விழுங்கியவிருள்கால்சீப்பத்
திருமகண்முதலாயுள்ளதெய்வமங்கையர்தங்கண்ட
மொருவரும்பலபூண்பூணவுதவிசெய்திருக்கண்டத்திற்
பொருவருமொளிசால்கட்டுவடம்பலபொலியப்பூட்டி (சுரு)

நிலம்புனைோனக்கோடுநெடுவெலிக்கூர்மத்தோடும்
புலம்புகொண்டிலனந்துதேம்பப்பொங்கொளிமணிமதாணி
நலம்புனைதாளக்கோலவநகுமுபவீதம்வெய்யோன்
றலம்புகர்படிக்கும்வீரசங்கிலியாதிசேர்த்து. (கூசு)

குடங்கைசெங்கமலமென்றுகுறித்திளங்கதிர்சூழ்ந்தென்ன
வடங்கலுங்கமலராகமழுத்தியகடகமுன்கை
யிடங்கொளப்புனைந்துமாயமீன்விழியெலும்புள்ளுட்டத்
தடங்கரவிரலினூடுதேவாமணியாழிகோத்து. (கூஎ)

அகத்தமர்கருணைபோலப்புறத்தினுங்குளிர்ச்சியார
மிகத்தழைகலவைச்சாந்தும்விளங்குறமார்பிற்பூசிப்
புகத்தகுமரவம்போக்கிப்பொன்னனாஞானுந்தேசு
தகத்தழையுதரபந்தமுந்திருவரையிற்சாத்தி. (கூஅ)

கரியுரிகழித்துச்செம்பொற்கலிங்கவுத்தரியம்போர்த்தி
வரிகழன்மறையீறெட்டாமலர்ப்பதநாலவீக்கி
விரிமலர்மாலைசூட்டிவிளங்குபேரழகுநோக்கி
யரியயனுதியெல்லாவமரருந்தொழுதுநின்றார். (கூகூ)

பல்லியமுகிலினார்ப்பப்பணவர்வாய்வாழ்த்துமல்க
நல்லியலடியாரெல்லாநயந்துபன்மலருந்தூவ
வல்லியமுரித்தபுத்தேண்மணவனாத்தவிசுமேவி
யல்லியங்குழலாராடுமாடல்கண்டிருந்தானன்றே. (எ0)

கருங்குழலிந்திராணிகலைமகடிருமான்மற்று
மருங்குளமகளிர்கூடிமலர்க்கரங்குவித்துப்போற்றி
யொருங்குலகீன்றுடன்னையுறுவினைதுவர்களப்பி
நெருங்குபல்லியங்களேங்கநிலவுநீராட்டினாரே. (எக)

மெல்லிழைக்கலிங்கங்கொண்டுமேனியினீரமொற்றி
வல்லிருமுலைப்பொன்றேதிவாசனையூட்டிச்சீவி
நல்லியலெஃகந்தொட்டுநலம்புனைதெய்வவுத்தி
வில்லியல்பிறைமுற்சேர்த்துவிளக்கஞ்சால்செருக்குச்செய்து. (எஉ)

மழைமுகிலடுத்துநின்றவானவிற்பொலிவுமானத்
தழையெழினுதலின்மேலாவிலம்பகந்தயங்கச்சூட்டிக்
குழையுமற்றதற்குநாப்பட்டடித்தொன்றுகுலாயதென்னப்
பிழையில்செம்மணிகால்யாத்தபட்டமும்பிறங்கச்சேர்த்து. (எங)

அவையடியொருமீன்றேன்றிற்றெனவவிர்பொட்டொன்றிட்டே
யிவைகளாறேக்கப்பட்டோர்க்கிருங்கருமலமென்றுள்ள
நவைபுறப்படுமாலென்றுஞாலத்துக்கறிவிப்பார்போற்
செவையிவர்கட்புறத்திலஞ்சனந்திகழத்தீட்டி. (எச)

மதிவளர்குலத்திற்றோன்றிமாண்புமிக்களித்தாய்நாயேன்
பதிதருங்குலத்துந்தோன்றிற்பண்புமிக்காமேயென்று
கதிரிருசெவியினூடுங்கனாவதற்கடுத்ததொப்பத்
துதிசெயுங்குழைகடேக்குந்தோடிருகாதும்பெய்து. (எரு)

நகைமுகமதியமீன்றநகுகதிர்முத்தமென்னத்
தகைகெழுநாசிமேலாற்றயங்கொளிமுத்தொன்றிட்டு
மிகையுறுகொங்கைவெற்பின்மேலெழுபசுவேயீன்ற
பகையில்பன்முத்தமென்னப்படர்முத்தமாலைசாத்தி. (எசு)

கந்தரமெனும்பேர்பூண்டவளைநிதிகமலராக
முந்தொளிவயிரஞ்செம்பொன்முதற்பலவீன்றதென்ன
நந்தியவிருள்கால்சித்துநகுகதிர்விளக்கஞ்செய்ய
வந்திலாங்கியையத்தக்கவணிகள்பற்பலவும்பூண்டு. (எஎ)

படரொளிமுத்தமாலையுள்ளுறப்பைம்பொன்மாலை
யடரும்வித்துருமமாலைமரகதமாலையான்ற
தொடர்புடைவயிரமாலைதோற்றஞ்சான்மற்றைமாலை
விடலருமதாணியோடுமேதகவொழுங்கிற்பூண்டு. (எஅ)

இறையவன்முகத்துக்கண்ணுயிருந்துநாடோறும்வாழு
முறையுடையெங்கடேசுமுருக்குருதருள்கவென்றே
யறையிருகதிருங்கைசூழ்ந்தமைந்தெனப்பதுமராக
நிறையொளிவயிரம்யாத்தகடகங்கைநிகழச்சேர்த்து. (எகூ)

காந்தளம்போதுமேலாற்கலந்தபொன்வண்டர்மானப்
போந்தபொன்மணிபதித்தவாழிபொன்விரலிற்கோத்து
மாந்தளிர்மருட்டும்பட்டுவயங்கியமருங்குல்சேரச்
சேந்தபன்மணிகால்யாத்தமேகலைசிலம்பச்சேர்த்து. (அ0)

சிலம்புகிண்கிணிபொற்றண்டைமுதற்செறிபாதசால
மலம்புறமறையீறெல்லாமளப்பருமடியிற்சூட்டி
நலம்புரியுத்தரீயநகுகதிர்விளக்கஞ்செய்ய
நிலம்புகழ்நறும்பூமாலைநிறைதரவெடுத்துச்சூட்டி.. (அக)

திருமகண்முதலாயுள்ளார்செங்கரங்குவித்துப்போற்றி
யருகுகைகொடுத்துப்போதமென்மெலவடிபெயர்த்துப்
பெருகுபல்லியங்களார்ப்பப்பெருமறைமுழக்கஞ்செய்ய
மருமலர்க்கூந்தல்போந்துவள்ளல்பாலிருந்தாளன்றே. (அஉ)

வடவனாமுகட்டின்மேலான்மாணிக்கத்தருவும்பச்சைப்
படரொருகொடியுஞ்சேர்ந்தபான்மையிற்சிவபிரானு
மிடர்கெடுத்தெம்மையாளுமெழிற்பராபரையுஞ்செய்ய
சுடர்மணித்தவிசின்மேவக்கண்டவர்தொழுதுவாழ்ந்தார். (அ௩)

மாயவனெழுந்துவள்ளன்மலரடிவிளக்கியந்தப்
பாயதண்புனறன்சென்னிமேற்படத்தெளித்துக்கொண்டு
நேயமிக்குறப்பூசித்துநிலவுபல்வியமுமார்ப்பச்
சேயமாமுதல்வன்செங்கைச்சிரகநீரொழிக்கினுனே. (அச)

தருப்பைமாவிலையினேடுஞ்சார்ந்தவாண்டளப்பானுங்கு
விருப்பமாராணிச்செந்தீமேகலைக்குண்டத்திட்டே
யருப்புபல்சமிதையுஞ்சேர்த்தாச்சியஞ்சிருக்கின்வாக்க
வுருப்பவெந்தழன்மிக்குண்டுவலஞ்சுழித்தோங்கிற்றன்றே. (அரு)

மறையவர்வாழ்த்துமல்கமங்கலவியங்களார்ப்பக்
குறையறுத்துலகமெல்லாங்கூறெருணுக்களிப்பின்மூழ்கப்
பிறைமுடிப்பெருமானங்கைபிறங்குமங்கலநாணெல்லா
முறையுயிர்த்தவடன்கண்டமுகிழ்த்திடத்தரித்திட்டானே. (அசு)

மின்னியபெருமான்முன்னர்மிகுமதுப்பருக்கநல்கி
முன்னியசுரர்முன்யாருமுத்தவாலரிசிவீசித்
துன்னியமகிழ்ச்சிமேவச்சொலற்கருபேரானந்த
நன்னியமத்தாஞர்நாமினிப்புகல்வதென்னே. (அஎ)

பெரியநாயகிபொற்செங்கைபிறங்குதன்கையாற்பற்றி
யரியதானென்னுந்தீச்சூழ்ந்தமைதரப்பொரிகளட்டித்
தெரியவோர்கையாற்றூக்கிச்சீறடியம்மிசேர்த்துப்
பிரியமார்சாலிகாட்டிமகிழ்வித்தான்பெருமான்வையம். (அஅ)

மற்றுள்சடங்குமுற்றும்வழுவறமுடித்தபின்னர்க்
கற்றுளமுனிவர்போற்றக்காமனைக்காய்ந்தபெம்மான்
சற்றுளவிடையாளோடுந்தவாவுவளகத்தையுற்றுன்
முற்றுள்வுவகைபூப்பமுழுகினுர்யாருமின்பம். (அகூ)

இடைசிறிதுடையாளோடுமெம்பிரான்காட்சிநல்க
மிடைதருபலருங்கண்டுவாழ்ந்தனர்விடையும்பெற்று
ரடைதருதத்தம்வைப்பையடைந்தனரமர்ந்தாரப்பாற்
சடையுடைமுனிவகேட்டியென்றனன்றவாதசூதன். (கூ0)

திருக்கலியாணப்படலம் முற்றிற்று.

ஆ படலம் - கூ-க்கு - திருவிருத்தம்—சுகூஉ.

---

## உருத்திர தீர்த்தப்படலம்.

ஒருகொடிவரைப்பொழுதுலகழித்திடும், பெருவிறலுருத்திரப்பிரானபேதமாந்
திருவடைதரமனங்குறித்துச்செம்மலைப், பொருவருபூசனைபுரிதற்கெண்ணினுன்.

எண்ணியமுத்தலைவேற்கையெம்பிரான், நண்ணியதீர்த்தமுந்தலமுமூர்த்தியும்
புண்ணியம்பயப்பதோர்பொருவின்மான்மிய, நண்ணியவிடமெதுவென்றுநாடி
[னுன். (உ)

மருவறுகடிமணமகிழ்ந்துகண்டநா, ளுறுபெரும்புண்ணியமொன்றிக்கூடலாற்
கறுவுவெம்பவப்பகைகாற்றுமான்மியச், சிறுமருதூரெனத்தெளிந்தெழுந்தனன்.

எண்ணியவெண்ணியாங்கெய்தநல்குமப், புண்ணியப்பெருந்தலம்பொருக்கென்ற
ண்மினான், கண்ணியபுகழ்ச்சிவகங்கைமூழ்கினான், பண்ணியபுற்றுளாம்பரனைப்
[போற்றினான். (௪)

செம்மலுக்கெதிரொருதீர்த்தமாக்கினா, னம்மலர்ப்பெருந்தடத்தகிலதீர்த்தமும்
விம்முறத்தாபித்துவிரும்பிமூழ்கினான், றும்முவெந்தீப்பொரிச்சூலத்தண்ணலே.

நிலவுவெண்ணீற்றொடுநிகரில்கண்மணி, யிலகுறப்பூண்டெழுத்தைந்துமெண்ணிய
வ், வுலகவாம்புனல்முகந்தாட்டியொள்ளிய, பலனருள்வில்வமுற்பலவுஞ்சூட்டி
[னான். (௬)

அருக்கியமுதலியவனைத்துமன்புறு, திருக்கிளர்பேதமாந்தெளிவுமேவுற
மருக்கிளர்பூசனைவயங்கச்செய்தபின், பொருக்கெனத்துதிபலபுகறன்மேயினான்.

கற்பனையென்பனகழன்றசோதிநீ, யற்புதமூர்த்திநீயனைத்துமாகிய,
சிற்பரவியோமநீசெல்வமிக்குயர், பொற்பமர்சிறுமருதூரிற்புங்கவ. (௮)

மறைமுடியமர்தரும்வள்ளனீநெடு, மறைமுடிமுழக்கிடுமான்மியத்தனி
மறைமுடியணுகரும்வரதநீபுகன், மறைமுடிபொருமருதூரின்வாழ்பவ. (௯)

என்றுதோத்திரம்பலவிசைக்குமேந்தன்மு, னென்றுநாயகனெழுந்தருளியுத்தம
நன்றுநீகருதியநலமளித்தனஞ், சென்றுநின்பெரும்பதஞ்சிவணிவாழ்தியால். ()

ஒன்றியவெமக்குமற்றுனக்கும்பேதமே,யின்றிஃதுணர்பவரெம்மொடொன்றுவர்
நன்றியதகைநினைநம்மின்வேறுசெய், புன்றகையினர்க்கிலைபொருவின்ஞானமே

புரிதொழில்குறித்திருபுலவரோடுனைச், சரிசொலுமவர்விழுந்தகையர்கும்பியி
னெரிமருள்சூலிநீயியற்றுதீர்த்தந்தோய், பரிவினரெண்ணியபலவுமெய்துவர். ()

என்றுநல்வரங்கொடுத்திறைமறைந்தன, னென்றுவெஞ்சூலிதன்னுலகம்புக்கன
னன்றுயர்பலமெலாநலக்கவேய்துவர், சென்றுநல்லுருத்திரதீர்த்தமூழ்குவோர்.

நீதியவுருத்திரநீரின்மூழ்குதற், கோதியநாளெலாமுறுவிசேடமா
மாதிரைநாளவற்றதிவிசேடமாந், தீதியலாதவித்தினங்கடம்முளும். (௧௪)

மார்கழியாதிரைமருவிமூழ்குறிற், சேர்கழியாப்பலசிறப்புஞ்செல்வமும்
பார்கழிமுத்தியும்பயப்பதுண்மையாற், கார்கழிஞானமுட்கலக்குமெண்ணினும்.

செம்மைசாலுருத்திரதீர்த்தமான்மிய, மும்மையார்புவனத்துமொழியவல்லரா
ரம்மையோர்பாகங்கொண்டகிலங்காத்திடு, மெம்மையாளிறைவனேயிசைக்கவல்
[லவன், (௧௬)

வருத்திரவுரவமுற்றுயரமாற்றுறு, முருத்திரதீர்த்தத்தினுயர்ச்சிகூறினுங்
கருத்திரமுறுதெனக்கணாந்துமற்றதுங், குருத்திரவியமெனக்கூறுஞ்சூதனே. ()

உருத்திரதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆக படலம் - ௧௦ - க்கு - திருவிருத்தம்—௬௪௧.

---

## விட்டுணுதீர்த்தப்படலம்.

சங்குசக்கரந்தாங்குந்தடக்கையான், பொங்குதானவரோடுபோரல்குறித்
தெங்குநாஞ்சென்றிறைஞ்சுதுமென்றெண்ணித், தெங்குமேயசிறுமருதூருற்றான்

தெளிசெய்நாயகிசெய்சிவகங்கையு, மொளிசெய்மேன்மையுருத்திரதீர்த்தமு
மளிசெயன்பினணைந்துமுழுகினான், களிசெய்வண்டுகெலக்குந்துழாயனே. (௨)

திருந்துநீறுதிகழப்புனைந்தறம், பொருந்துகண்மணிபூண்டெழுத்தைந்தையும்
வருந்துதீரமதித்துக்கொடுவிட, மருந்துநாயகன்முன்னரணைந்தனன். (௩)

அங்கமெட்டினுமாறினுமைந்தினும், பங்கமோவப்பணிந்துபணிந்தெழுந்
துங்கணீங்கியுருத்திரதீர்த்தப்பாற், றங்கமார்கிழக்கோர்தடந்தொட்டனன். (௪)

முன்னமூழ்கிமுகிழ்க்குமலர்செறி, யன்னதீர்த்தங்கொண்டையனையாட்டியே
பன்னமாதிப்பலமலர்சூட்டிமிக், குன்னவாங்கனியாதியுமூட்டினான். (௫)

செய்யவேண்டுபசாரமெலாஞ்செயா, வையவிங்ஙனமம்மையையும்புரிந்
தெய்யமீண்டுபிரான்முனமெய்தினான், றெய்யவான்றுதிசெப்பலுற்றானரோ. ()

ஆதியேயநமேயருளேயுமை, பாதியேபரமேபரவானமே
மோதியேயிருள்சாடுமுழுப்பெருஞ், சோதியேயுன்றுணையடிபோற்றினேன். ()

ஐயனேயழல்கான்மழுமான்மறிக், கையனேபொய்கடிந்தவருள்ளமர்
மெய்யனேயந்திமானமிளிருருச், செய்யனேயுன்றிருவடிபோற்றினேன். (௮)

காலகாலகபாலசுபாலன, நீலவாலமிடற்றநெருப்பெழும்
பாலலோசனபார்ப்பதிபாகவி, சாலசீலநின்றாளிணைப்போற்றினேன். (௯)

பொருதமேவும்புயவலித்தானவர், நிருதராதியர்நீங்கவருள்செய்வாய்
கருதமிக்கினியாய்கண்டதேவிவாழ், மருதவாணநின்மாண்பதம்போற்றினேன்

என்றுதோத்திரஞ்செய்யுமிணர்த்துழா, யொன்றுமாலையுலப்புயத்தானெதிர்
கன்றுமான்மழுவேந்துகைத்தம்பிரா, னன்றுதோன்றியருளுந்தன்மேயினான். ()

திதிமகாரொடுநீபொரல்சிந்தைவைத், ததிகபூசனைநம்மடிக்காற்றினை
யெதிரிலாதொளிரித்தலத்தாதலான், மதிசெய்மாயவவுள்ளமகிழ்ந்தனம். (௧௨)

வலியதானவர்மர்ட்டமராடிநீ,' பொலியவாகைபுனைவரநல்கினே
மொலியவாங்கழலாயுனக்கின்னுமென்,மெலியலாவரம்வேண்டுமுனாயென்றான்

என்றபோதினிறைஞ்சியிம்மாத்தலத், தொன்றநின்னடிபோற்றியுறைதர
நன்றவாவினனான்புரிதீர்த்தத்து, மன்றமூழ்கினர்வாழ்தரவேண்டுமால் (௧௬)

ஈதுமையநல்கென்றடிதாழ்தலுந், தீதுதீரநிருதித்திசைவயி
னோதுகோயில்கொளுன்புனன்மூழ்குவோர், காதுதீவினைக்கட்டறுத்துய்வரால்

என்றுகூறிமறைந்தனனெம்பிரா,னன்றுமாயவனத்திசைக்கோயில்கொண்,டொ
ன்றுதானவர்தம்வலியோட்டியே, யென்றும்வாழ்வனுற்றார்க்கின்பருளியே. ()

அனையனாற்றியவப்புனலோணநா, ணினையமூழ்குனர்நீடுவறுமைநோ
யினையவெவ்வகைச்செல்வமுமெய்துவார், துனையவன்னானுலகத்துந்துன்னுவார்

ஈதுமாயவன்றீர்த்தச்சிறப்பினிச்,சாதுமேன்மைச்சவுநகமாதவ
போதுசேரயன்றீர்த்தப்புகழ்மையு, மோதுகேனென்றுரைத்திடுஞ்சூதனே.(௧௮)

விட்டுணுதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௧௧ - க்கு திருவிருத்தம்—௬௬௭.

---

## பிரமதீர்த்தப்படலம்.

இண்டைமாமலரிருக்குநான்முகன், றொண்டைவாயொருதோகைமாதைமுன்
கண்டையாவுளங்கலங்கிமோகித்தான், பண்டையூழ்வினைபாற்றவல்லரார். (௧)

அன்னபாவமேலடர்ந்துபற்றலு, முன்னமாந்தொழின்முழுதுந்தீர்ந்ததா
லென்னசெய்துநாமினியென்றுற்றனன், கன்னல்வேலிசூழ்கண்டதேவியே. ()

அங்கண்வந்துமையமைத்ததீர்த்தமுஞ், சிங்கறீருருத்திரநற்றீர்த்தமுஞ்
சங்கபாணியோன்சமைத்ததீர்த்தமுந், துங்கமார்தரத்துளைந்தெழுந்தனன். (௩)

செங்கண்மாயவன்றீர்த்தத்தென்றிசை, முங்குதீர்த்தமொன்றாக்கிமூழ்கினான்
புங்கநீறுகண்மணிபுனைந்தன, ணங்கனுற்றெழுத்தைந்துமெண்ணினான். (௪)

அன்னநீர்முகந்தாட்டியையனைச், சொன்னகூவிளமாதிசூட்டியே
யுன்னவாஞ்சுவையுணவுமூட்டினா, னென்னசெய்கையுமினிதியற்றினான். (௫)

கண்டவாமொழிக்கண்ணிபாகனே, கண்டவாநுதற்காலகாலனே
கண்டமாமதிகலந்தசென்னியாய், கண்டதேவிவாழ்கருணைமூர்த்தியே. (௬)

அண்டராதியோரலறியச்சமுட், கொண்டதோர்ந்துவெங்கொலைசெய்நஞ்சினை
யுண்டநாயகாவுமையோர்பாகனே, கண்டதேவிவாழ்கருணைமூர்த்தியே. (௭)

என்றுதோத்திரமியம்பியிவ்வண, மொன்றுப்பல்பகலுறையுமேல்லையிற்
கன்றுமான்மழுக்கையர்தோன்றினர், நன்றுநான்முகனயந்துபோற்றினன். ()

அன்னவூர்திகேளான்றவித்தல, மென்னபோதுநீயெய்தப்பெற்றுளா
யன்னபோதுபோயழிந்ததுன்கரி, சென்னமேன்மையுமெய்தப்பெற்றுளாய். (கூ)

இந்தமாத்தலம்யாவரெய்தினும், பந்தமாருமெப்பாதகங்களு
முந்தவோட்டுவார்முத்தியெய்துவார், சந்தமேவுமெய்ச்சிறப்புஞ்சாருவார். (க0)

இங்குறுதுநீயெங்குமேவினும், பொங்குதீவினைபோதலில்லைகாண்
கொங்குசார்மலர்க்கோயின்மேவுவோய், தங்குநின்றொழிற்றிறமுஞ்சார்தியால்()

இன்னும்வேண்டுவதியம்புகென்றனன், மன்னுநான்முகன்வணங்கியையவெண்
முன்னுதீர்த்தநீர்மூழ்குவோரெலாம், பன்னுமேன்மையிற்படரநல்சென்றுன். ()

அன்னதாகெனவருளிவள்ளலா, ருன்னவாயபுற்றுண்மறைந்தனர்
பின்னல்வார்குழற்பெரியநாயகி, தன்னதாள்களுந்தாழ்ந்துபோற்றினன். (கங)

ஓங்குசத்தியவுலகநண்ணினு, றுங்குமுன்றொழிலாற்றிவாழ்ந்தனன்
றேங்குமற்றவன்றீர்த்தமூழ்குவோர், பாங்குசால்வரம்பலவுமெய்துவார். (கச)

தெரிந்துரோகணித்தினத்தின்மூழ்குவோ, ரரிந்துதீவினையாக்கமெய்துவார்
புரிந்துமற்றவன்பதத்தும்போய்ப்புகுந், திரிந்துதிர்தராதென்றும்வாழ்வரோ. (கரு)

கஞ்சமேலவன்கண்டதீர்த்தமீ, தஞ்சமாமனுவமைந்தசிந்தையாய்
தஞ்சவெய்யவன்சமைத்ததீர்த்தமுந், துஞ்சவோர்தியென்றோதுஞ்சுதனே. ()

பிரமதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் - கஉ - க்கு - திருவிருத்தம் — கூஅங.

---

## சூரியதீர்த்தப்படலம்.

மோதுகடன்முகம்புழுங்கமுளரிமுகைமுறுக்குடைய
வோதுமலர்தலையுலகத்துயிரெலாங்கண்விழிப்பச்
சாதுமறைமுழக்கெடுப்பத்தழைகருமச்சான்றாகித்
தீதுதவிரோராழித்தேருடையமெழுவெய்யோன். (க)

ஒருமனைவியவன்கனல்வெப்புடறழுவற்காற்றுளாய்ப்
பொருமியழுதினைந்தேங்கிப்போய்த்தந்தைபாலுணாப்ப
வெருவில்வலித்தந்தையெனும்விச்சுவகன்மன்றெரிந்து
குருமலிபொற்பூங்கொடியையஞ்சற்கவெனக்கூறி. (உ)

சான்றபரிதியைப்பிடித்துச்சாணையிடைவைத்துணாத்திட்
டான்றகதிர்களைத்தேய்த்தானுறியதுவெப்பமுட
னேன்றகுலக்கொடிமகிழ்ந்தாள்கதிர்முழுதுமிழந்தமையாற்
றேன்றவருசெம்பரிதிசுடரின்றிமழுங்கிற்றே (ரு)

இனியாதுசெய்குதுமென்றெண்ணியடைந்தவர்க்கெல்லா
முனியாதுகருணைபொழிமுதல்வனூர்சிறுமருதூர்
பனியாதுசென்றடைந்துபரவுதுமேற்றுயர்முழுதுங்
கனியாதுசெய்வனென்றுகண்டதேவியையடுத்தான். (௬)

கண்டதேவியினயன்மால்காணாத்தேவியையொருபாற்
கொண்டதேவனைவணங்கிக்குலவியமற்றவன்றென்பால்
விண்டதேமலர்நாளுமிடைசிவகங்கைக்கீழ்பால்
வண்டர்தேதேயெனும்பன்மலர்த்தடமொன்றியற்றினன். (௭)

அன்னபெரும்புனன்மூழ்கியழகியவெண்ணீறணிந்து
பன்னருங்கண்மணிபூண்டுபரவுறுமைந்தெழுத்தெண்ணிச்
சொன்னபுனன்முகந்துமருதடிவளர்சோதியையாட்டி
மின்னகுபன்மலர்சூட்டிவில்வமுங்கொண்டருச்சித்தான். (௮)

இவ்வண்ணம்பூசைபுரிந்திருக்குநாளிரங்கிமிளிர்
செவ்வண்ணப்பெருமானூர்திருக்காட்சிகொடுத்தருள
வுய்வண்ணமுண்டாயிற்றுண்டாயிற்றென்றெழுந்து
மைவண்ணத்துயரொழிந்துமலரடிதாழ்ந்திதுதுதிப்பான். (௯)

திருமுகத்துவலக்கண்ணாய்த்திருமேனிகளுளொன்றாய்ப்
பொருசமருக்கெழுங்காலைப்புவியியக்கும்பதத்தொன்றாய்
மருவுமிருக்கையுளொன்றாய்வயங்குமொருசிற்றடியே
னுருவவொளியிழந்திருத்தலுன்பெருமைக்கழகேயோ. (௧௦)

பிறங்குபெருங்குணக்குன்றேபெரியநாயகியைமணந்
தறங்குலவவுலகினுக்கின்பளித்தபேரருட்கடலே
நிறங்குலவுமருதடிவாழ்நித்தியநின்மலச்சுடரோ
புறங்கிளருமொருநாயேன்பொலிவிழத்தலழகேயோ. (௧௧)

புரமூன்றுமொருநொடியிற்பொடிபடுத்தபுண்ணியனே
சிரமூன்றுமொருநான்குஞ்செறிந்தாருக்கறிவரியாய்
வரமூன்றும்படியடைந்தார்தமக்கருளுமாநிதியே
திரமூன்றுமொளியிழந்தியான்றேம்பிடுதலழகேயோ. (௧௨)

என்றுதுதித்திடுவோனுக்கெம்பிரானருள்சுரந்து
நன்றுகுணக்குதித்திடுவோய்நாமொழிதிமுன்போலத்
துன்றுமொளிபெறுதியிருடொலைத்துவாழுதியின்னு
மொன்றுவரம்வேண்டுவதென்னுரைத்தியெனப்பணிந்துரைப்பான். (௧௩)

ஐயவறிவிலிநாயேனுய்ந்தனனென்னழலுடலஞ்
செய்யமனையவடலூவுந்திறமுமுதவுதல்வேண்டு
மெய்யமையவென்றீர்த்தம்விரும்பிமுழுகுனர்கினது
மைமிலருட்சூரியராய்வயங்கிமருவுதல்வேண்டும். (கஉ)

இனையவரந்தருதியெனவிரந்தனனிவிழைந்தபடி
யனையவரந்தந்தனமென்றருளிமறைந்தனன்பெருமான்
முனையமழுப்படையேந்துமுதல்வனைமற்றவனிடப்பா
லனையமலர்க்குழற்பெரியநாயகியைப்பணிந்தெழுந்து. (கங)

தன்னுலகம்புகுந்துகதிர்தழைந்துகருகிருளோட்டி
மன்னுலகவிழியாகிவயங்கினன்மார்த்தாண்டன்
றுன்னுலகம்புகழுமவன்றெட்டதீர்த்தம்படிவோர்
பொன்னுலகமடைந்துபெரும்போகமெலாந்துளைந்திடுவோர். (கச)

ஆதிவாரம்படிவோராயனருட்சூரியராய்ச்
சோதிவார்கயிலாயந்தன்னிடுவர்பரிதிதட
நீதிகாணிதுமதிசெய்நெடுந்தீர்த்தப்பெருமையுங்கே
ளோதியாயென்றுரைத்துமேலுமுரைத்திடுஞ்சூதன். (கரு)

சூரியதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் - கரு - க்கு - திருவிருத்தம் — சுகூஅ.

## சந்திர தீர்த்தப்படலம்.

மதியெனுங்கடவு, ளெதிபுரிகுரவன், பதிமனையவடன், பொதிநலனுகர்ந்தான். (க)

அதுதெரிகுரவன், விதுமுகநோக்கி, முதுசினங்கடவச், கதுமெனவைதான். (உ)

நீகயரோகி, யாகவென்றுரைத்த; மோகமிலுரைகேட், டாகமிக்குளைந்தான். (ங)

என்னினிச்செய்வ, தென்னனைந்தழிந்தே, யென்னவந்துறினு; மென்னரனுள
[ளல். (ச)

என்றுளந்துணிந்தா, னன்றுவந்தடைந்தான், றென்றுவெவ்வினைதீர்த், தொன்
[றுபொன்மாரி. (ரு)

மருதடிமேய, வொருதனிக்கடவு, ளிருசரண்போற்றிப், பருவரதீர்ப்பான். (சு)

தூயவள்பெரிய, நாயகிபதமு, நேயமிக்குருகி, யாயறப்பணிந்தான். (எ)

மடக்கொடிபாகற், கிடப்புறமாகக், கடப்படுபெரியா, ட்டத்தொருகீழ்பால். (அ)

ஒருதடமாற்றி, வெருவறமூழ்கித், திருவமர்நீறு, மருவமெய்ப்பூசி, (கூ)

வாலியவக்க, மாலிகைபுனைந்து, கோலியவெழுத்தைந், தாலியவெண்ணி. (கo)

அப்புனன்முகந்து, வெப்பமில்பெருமான், றிப்பியமுடிமே, லொப்பறவாட்டி. ()

மலர்ப்பலசூட்டி, யலர்கனியூட்டி, யுலர்சுடர்கோட்டி, நலர்கொளத்துதிப்பான்.

அறிவிலிநாயேன், செறிதரப்புரிந்த, முறிவில்வெம்பழியைப், பிறிதுசெய்பெரும.

குணமிலிநாயே, னணவுறப்புரிந்த, தணவரும்பழியை, யுணவுசெய்யொருவ. ()

கோடியநாயேன், றேடியப்பழியை; வாடியபுரிதி, நீடியநிமல. (கரு)

சிறுமருதூர்வாழ், மறுவறுதேவே, கறுவுசெய்நாயேன், பெறுப்பழிதவிர்த்தி. ()

என்றுளையாட, வன்றுநங்கோமான், முன்றனித்தோன்றி, நின்றனனுவந்தே. ()

கண்டனனலோன், றண்டருமுவப்பின், மண்டனிற்றேயத், தெண்டனிட்டெ[ழுந்தான். (கஅ)

குரவனைப்பிழைத்த, வுரவுடைப்பாவம், விரவியித்தேத்துப், ப்ரவலிற்றீர்த்தோம்.

தேய்தலும்வளர்வு, மாய்தரலின்றி, யாய்தரப்பொலிதி, பாய்மதித்தேவே. (உo)

வேண்டுவதினியென், னீண்டுரையென்னக், காண்டகுதிருத்தாள், பூண்டிடீந்து[ளைப்பான். (உக)

தோற்றியநாயே, னூற்றியதீர்த்தம், போற்றியமேலோர், பாற்றிருவுறுக. (உஉ)

இதுதருகென்று, னதுநனியருளிக், கதுமெனமறைந்தான், விதுமுடிப்பெருமான்

மதிதனதுலகம், பதிதரப்புகுந்தான், றுதியவன்றீர்த்தம், விதியொடுதோய்வார்.

வேண்டியசெல்வம், பூண்டினிதமர்வா, ராண்டவன்வார, மூண்டுறைப்படிவோர்.

எண்ணியதடைவார், புண்ணிமதிநீர், நண்ணியதிதுமேற், கண்ணியகதையும். உசு

சொற்றிடக்கேட்டி, நற்றவனேயென், றுற்றுளைசெய்வான், சொற்றருகுருதன்.

சந்திரதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௰ கச - க்கு - திருவிருத்தம்—எஉரு.

---

# சடாயுபூசைப்படலம்.

முராரிமுற்பிருகுமாமுனிவன்சாபத்தாற், றராதலத்தயோத்தியாடசரதற்கணை
யராவணைதிகிரிகளனுசராயுற; விராமனென்பெயர்புனையெச்சமாயினன். (க)

நிறைபெருங்கலையெலாநிரம்பக்கற்றபின்,குறையொழியிளவல்பின்றொடரக்கோ
சிக, னறைமகச்சாலையையடைந்துதாடகை, முறைமகனேடுயிர்முடியப்பாற்றி
[யே. (உ)

மகவினைநிரம்புறக்காத்துமாமைசா, லகலிகைகல்லுருவகற்றியாய்வள
மிகவுடைமிதிலையிற்புகுந்துவில்லிறுத், திகல்விழிச்சீதைகையினிதுபற்றியே. ()

மழுப்படையிராமனைவழியினேற்றவன், சொழுப்படைதரப்பறித்தகன்றகூடிய
முழுப்படையொடுமெதிலயோத்திமுன்னினன்;விழுப்படையேந்தியவீரர்வீரனே

இளையதாய்கலாம்புரிந்திடலிற்சீதையும், வளைசிலைத்தம்பியுந்தொடரமன்னனெ
ஞ், சுளைதரநகரநீத்துவந்துபோயொரு, விளைவலிக்குகனையும்விரும்பிநட்டரோ.

பாதுகைகொடுத்தழும்பரதற்போக்கியே, மோதுவல்விராதனைமுடித்துமாதவச்
சாதுமாமுனிவரர்தம்மைப்போற்றிநட், டோதுகோதாவிரிதீரத்துற்றனன். (சு)

ஆவயினரக்கிமூக்கரிந்துபோக்கிட், மேவியகரன்முதலோரைவீட்டிமெய்
சார்வருநவ்விமாரீசன்சார்தரக், கூர்வரும்பகழியொன்றேவிக்கொன்றனன். (எ)

வையமேத்திளவன்முன்மாட்டுச்சென்றிடக்,குய்யம்வைத்ததிதிபோற்குறுகிநோ
க்கிய, வெய்யவாளரக்கர்கோன்விரும்புசீதையை, யையகொண்டேகலுமவள்புல
[ம்புவாள். (அ)

ஓதரும்பேதமையுறைத்தநீர்மையாற், றீதமையும்படிசிந்தைசெய்துளே
னாதகாதெனவிவணடைந்துகாத்தியென்,னாதனேநாதனேயென்றுரையுமால்.()

வளமிலைமாயமான்வண்ணமென்னவு, மளமருமனத்தொடுமேவாவப்பட்டியான்
களமிகுமரக்கனாற்கலங்கிநொந்துளே, னிளவலேயிளவலேயென்றுதேம்புமால்.

வேறு.

சீதையிங்ஙனமழுதழுதிரங்குபுதேம்பு
மோதையஞ்செவியூடழற்சலாகையினுறலு
மாதையாவனேகொடுசெல்வானெனமதித்திராமன்
றாதையாகியநெடுவலிப்பெருஞ்சிறைச்சடாயு. (கக)

எழுந்துவான்மிசைப்பறந்தனனொருதேரொடிருந்
தழுந்துதுன்பமுற்றயர்தருமருகியைக்கண்டான்
விழுந்துதேம்பிநீமெலியற்கமெல்லியலென்று
கொழுந்துகொண்டெழுவெகுளியான்கொடியனைநோக்கி. (கஉ)

என்னகாரியஞ்செய்தனைகொழுந்தழலெடுத்துத்
தன்னதாடையிற்பொதிபவர்தம்மைநிகர்த்தாய்
மன்னன்மைந்தனிதுணர்தரின்வாழுவைகொல்லோ
வன்னனேருருமுன்னணங்கைவிட்டகலுதியரக்க. (௧௩)

என்றுகூறலுநீயொருசழுகுமற்றெனக்கு
நன்றுகூறுதனன்றுநன்றுலெனநகைத்தான்
வென்றுமேம்படுமென்னுளாவிழந்திலைநகைத்தாய்
கொன்றுநின்னுயிர்குடிப்பலென்றுருத்தனன்சடாயு. (௧௪)

வில்வளைத்தனன்வெஞ்சரம்பற்பலதொடுத்தான்
மல்வளைத்ததோளிராவணன்மற்றதுநோக்கிச்
சொல்வளைத்தவெஞ்சிறைவலிச்சடாயுவுந்துனைந்து
சொல்வளைத்தனனலகினற்குலைதரக்கறித்தான். (௧௫)

மீட்டும்பற்பலவெஞ்சரந்தொடுத்தனன்றேட்டி
காட்டுமூக்கினுங்காலினுஞ்சிதர்தரக்கழித்துப்
பாட்டுவண்டுளர்மாலைமற்றவன்கரம்பரித்த
கோட்டுவெஞ்சிலைப்பறித்ததுமுறித்ததுகுருகு. (௧௬)

புள்ளுவன்மைமிக்கழகிதாலென்றிறும்பூது
கொள்ளுநெஞ்சினன்மீட்டுமோர்கொடுஞ்சிலைகொண்டு
தெள்ளுகூர்ங்கணைபற்பலவுடம்பெலாஞ்செறிந்து
நள்ளுமாறுதொட்டார்த்தனன்வானமுநடுங்க (௧௭)

ஆர்த்தகாலையினொருவையுந்தனதுமெய்யடங்கப்
போர்த்தவாளிகளனைத்தையுமுதறுபுபோக்கிக்
கூர்த்தமூக்கினுற்குண்டலமணிமுடிபுயத்துச்
சேர்த்தபூண்முதற்பறித்துமட்சிதறியதன்றே. (௧௮)

கொடியவெஞ்சினங்கொதித்தெழவேலொன்றுகொண்டு
நெடியவன்சிறைச்சடாயுமேல்விடுத்தனனிருதன்
மடியமற்றதுசிறைவலிக்காற்றினன்மாற்றிப்
படியமண்ணிடைப்பாகனைச்செகுத்ததுபறவை. (௧௯)

தண்டமொன்றுகொண்டெறிந்தனனரக்கர்தந்தலைவ
னண்டம்விண்டதென்றறைதரவதுவிரைந்தணுகல்
கண்டபுள்ளுமற்றென்செயுமிதுவெனக்கடுகித்
துண்டம்வைத்திருதுண்டமாக்கியதவன்சோர. (௨௦)

நாட்டுமன்னவன்மருகியுணலிதரப்பொழுது
நீட்டுகின்றதென்னென்றுவெஞ்சினங்கொடுகிமிர்ந்து
கோட்டுவார்சிலைதூணியாழ்க்கொடியையுங்குறைத்துப்
பூட்டுவாம்பரிமுழுமையுங்கொன்றதுபுள்ளே. (௨௧)

இனையவெஞ்சமராற்றுழியிராவணனெண்ணின்
முனையவெம்படைசெலுத்தியுமொருமயிர்முனையு
நினையமாய்ந்திலதென்னினிச்செயலெனநினைந்து
வினையமொன்றனல்வெல்லுவான்குறித்திதுவிளம்பும். (௨௨)

வருதிவீரருள்வீரனீயுயிர்நிலைமதித்தே
பொருதனன்றுநின்னுயிர்நிலைபுகலெனப்புகன்றான்
கருதல்வேறிலானின்னுயிர்நிலைகழறென்றா
னிருதனென்வலத்தாட்பெருவிரனிலையென்றான். (௨௩)

வஞ்சமில்லவனிருஞ்சிறையடியெனவகுத்து
நஞ்சமன்னவனகுபெருவிரற்றலைமோதத்
துஞ்சறீர்ந்தவனிருந்தனன்சுடர்வடிவாள்கொண்
டெஞ்சுறாதிருசிறையையுமறுத்துமண்ணிட்டான். (௨௪)

சடாயுவீழ்தலுஞ்சானகிதனைக்கொடுபோனான்
கடாவுவாள்வலியரக்கன்மற்றிவனிலைகலங்கிப்
படாதமெய்யுரைத்திறத்தலின்வெற்றியென்பாற்றே
கெடாதசீருமுண்டாயதென்றுவந்ததுகிளர்புள். (௨௫)

உண்மைகூறுதலெங்குநன்றாயினுமுறுணா
யன்மையாரெனமதித்ததுகூறுதலடாதா
லெண்மையாயினேன்படையிடத்தஃதிசைத்தெனினும்
வண்மைசால்புகழ்க்கீறிலையென்றுளமகிழ்ந்தான். (௨௬)

கறைவிடந்தருகூரெயிறிழந்தகட்செவியும்
பிறைநிகர்த்திடுமருப்பிழந்துழன்றபேருவாவு
மிறைசெயேதிகையிழந்தவோர்வீரனும்விசைக்குஞ்
சிறையிழந்தமற்றியானுமொப்பினிச்செயலென்னே. (௨௭)

மண்ணின்மீமிசையிருந்துயிர்வாழ்தலின்மதிப்பா
ரெண்ணின்மேவியசிவபிரான்பூசனையியற்றி
விண்ணின்மேலெனுமவனடியடைவதேமேன்மை
கண்ணினிங்கிதிற்சிறந்ததுவேறொன்றுகாணேன். (௨௮)

என்றுதேறினன்மென்மெலநடந்துவந்திமையோர்
சென்றுபோற்றிடுமருச்சுனவனத்தினைச்சேர்ந்தான்
கன்றுமாலயற்கறிவரியான்பெருங்கருணை
நன்றுசெய்திடப்பூசனைபுரிதிறநயந்தான். (௨௯)

மன்னுதம்பிரான்பச்சிமதிசையுமைவகுத்த
துன்னுதீர்த்தத்தின்குணதிசையொருதடந்தொட்டான்
முன்னுமத்தடமுழுகிவாயப்புனன்முகந்து
மின்னுநீண்முடியாட்டினன்வேடர்கோமகன்போல். (௩௰)

நறியகூவிளமாதிகணையந்துகொய்தெடுத்துச்
செறியச்சூட்டினன்காய்கனியூட்டினன்சேவித்
தறியமுன்னநின்றன்புறவடிக்கடிபணிந்து
நிறியமேன்மையிற்புகுத்திடுதோத்திரநிகழ்த்தும். (௩௧)

சிறையிலாதவென்பவத்துறுசிறைதவிர்ப்பதற்கே
குறையிலாதவிக்கான்மருதடிக்குடிகொண்டாய்
மிறையிலாதவெம்மழுப்படைவித்தகவிமல
கறையிலாதநின்கண்ணருள்வழங்கிடக்கடவை. (௩௨)

அரியசான்புகுந்தருந்தவமாற்றிலேனந்தோ
பிரியமேமிகுந்தூனுகர்வாழ்க்கையேபெற்றேன்
றெரியநின்னடிக்கடியனாயடைந்தனன்சீர்சால்
பெரியநாயகிமணாளநின்பேரருள்புரிதி. (௩௩)

என்றுவேண்டலுமெம்பிரான்பெரியநாயகியோ
டன்றுமால்விடைமேற்பொலிகாட்சிதந்தருள
நன்றுபோற்றுபுநின்றனாயகனோக்கி
யொன்றுபத்தியிற்புரிந்தநின்பூசனையுவந்தேம். (௩௪)

யாதுவேண்டினுங்கொடுப்பதற்கொருதடையின்று
லோதுகென்றலுஞ்சடாயுமற்றுவப்பொடுபணிந்து
சாதுமாமறைத்தலைவநின்னிருசரண்சார்ந்தேன்
போதுமேயநின்னடித்தலம்புணர்தலேவேண்டும். (௩௫)

சிறையிலாதவென்பூசனையேற்றலிற்செழுந்தே
னுறைசெய்கொன்றையாய்சிறையிலிநாதனென்றொருபேர்
நிறையநின்றனக்காகயானியமித்ததீர்த்தத்
துறையின்மூழ்குவோர்தூயராய்ப்பொலிவதுவேண்டும். (௩௬)

இன்னமூவகைவரமுந்தந்தருளெனவிரந்தா
னன்னதாகெனவருளுபுமறைந்தனனமலன்
பின்னராவயிற்பெயர்ந்திராகவன்வரல்பேண
முன்னர்வந்தனனடந்தகாரியமெலாமொழிந்து. (௩௭)

பொத்தையூன்பொதிபுலையுடம்பொழித்தனன்பொலிந்து
மித்தையாகியபவஞ்சவாழ்வனைத்தையும்வெறுத்து
நத்தையேந்தினோன்முதலியர்நணுகுதற்கரிய
சித்தைமேயினன்சிவானந்தபோகமேதிளைத்தான். (௩௮)

ஒற்றைமேருவில்வாங்கிமுப்புரத்தெரியூட்டுங்
கற்றைவார்சடைமருதவாணனைக்கடவுளர்க
ளற்றைநாண்முதற்சிறையிலிநாதனென்றறைவார்
பற்றையார்மனுவெனப்படும்பகர்பவர்க்கப்பேர். (௩௯)

சடாயுதீர்த்தநீர்மூழ்குவோர்தவாவினைதணந்து
படாதபேரின்பவாரியுண்மூழ்குவர்பத்தி
விடாதபுள்புரிபூசைசொற்றனமொருவேந்தன்
கெடாதபூசைசெய்மாட்சிகேளெனச்சொலுஞ்சூதன். (௪௰)

சடாயுபூசைப்படலம் முற்றிற்று.

ஆ படலம் - ௧௫ - க்கு - திருவிருத்தம்—௭௬௫.

---

## காங்கேயன்பூசைப்படலம்.

அருண்முகத்தமைந்தநெஞ்சிற்பாண்டிநாடடங்கவாழ்வோ
ணிருண்முகந்துண்டுமேற்செவிலங்கிலையலங்கல்வேலான்
பொருண்முகந்தெடுத்துவீசிப்புவியெலாம்புரக்குங்கையான்
வெருண்முகந்தொழியாவென்றிக்காங்கேயனெனுமோர்வேந்தன். (௧)

தாறுபாய்களிற்றுனேற்றதரியலர்மகுடமேலா
லேறுபாய்பரியானெங்குமெதிர்ந்துசெலிவுளித்தேரான்
மாறுபாய்வயவர்வெள்ளமகிதலமுழுதும்போர்க்கப்
பாறுபாய்களத்துச்சென்றுபகைப்புறங்காணவல்லான். (௨)

செழுமணிப்பூணன்சார்ந்தவுயிர்க்கெலாஞ்செய்யுநீழன்
முழுமதிக்குடையானெல்லாக்கலைகளுமுற்றக்கற்றான்
பழுதில்வெண்ணீற்றுச்செல்வம்பாலிக்கும்பண்புமிக்கான்
றொழுதகுசிவமேமேலாம்பரமெனத்துணிந்தநீரான். (௩)

காமருகண்டதேவியெனுநகர்கலந்துகாரு
மாமருமனைவிமக்கண்மலிதரவாழுநீரான்
பூமருவீசுமாலைப்புயாசலன்கடுஞ்சொலில்லான்
றேமருவடைந்தார்காட்சிக்கெளியவன்றிறத்தான்மிக்கான். (௪)

அனையவன்மதியான்மிக்கவமைச்சராதியர்தற்சூழ
நினைதருசெங்கோலோச்சிநீடுலகளிக்குநாளின்
வினையுறுவலியென்சொல்வாமேவுகோணிலைதிரிந்து
வனைதருமாரியின்றிவற்கடநிரம்பிற்றன்றே. (௫)

பரவுசோதிடநூல்வல்லார்பற்பலர்தம்மைக்கூவி
யுரவுநீர்ஞாலத்தென்னேமழைபெயலொழிந்ததென்றான்
புரவுசேரளியாயாண்டுபன்னிரண்டொழிந்துபோனல்
விரவுநீர்பொழியுமேகமென்றனர்வேந்தன்சோர்ந்தான் (௬)

உற்றபல்லுயிருமந்தோவுணவின்றிவருந்துமேயென்
றற்றமிலரசன்வேறுகளைகணுமறியானாகிச்
சொற்றடுமாறவீழ்ந்துசோர்ந்தனன்சோராநின்ற
மற்றவனுயிருண்கூற்றின்வற்கடம்பரந்ததன்றே. (௭)

கருமுகிலேட்டிலன்றிக்ககனத்துக்காண்பாரில்லை
யொருவிறம்பாணியன்றியுண்டிடும்பாணியில்லை
மருவுவெந்தாகநோயும்பசிநோயும்வருத்தலாலே
பொருவில்வெங்காமவேளும்போர்த்தொழிலொழிந்தானன்றே. (அ)

உழுதொழின்மறந்தாரெல்லாவுழவருமுழன்றுவெம்போர்க்
கெழுதொழின்மறந்தாரெல்லாவீரருமெரியுட்டெய்வந்
தொழுதொழின்மறந்தாரெல்லாப்பனவருஞ்சோறுசோறென்
றழுதொழின்மறந்தாரில்லையகலிடத்தெவருமம்மா. (௯)

பூசைசெய்தன்றியொன்றும்புரிதராப்புந்தியோர்க்கு
மாசைதம்முயிர்போகாமற்காப்பதையன்றியில்லை
மாசையேவிளக்குஞ்சோரமரீஇப்புணர்மடந்தைமாரு
மோசைகூர்கற்பின்மிக்கமாதரொத்திருந்தாரன்றே. (௧௦)

கமர்பலவுடையவாகிக்கடும்பணியுலகந்தோற்றி
யமர்பலவேரியெல்லாமறல்கவர்நசைமீக்கொண்டே
யிமிழ்முகிலினங்காள்வேட்கையிரிதரவொருங்குநீவி
ருமிழ்புனலென்றுகாண்போமென்றுவாய்திறத்தலொக்கும். (௧௧)

விரும்புசெஞ்சாலிமற்றைவெண்சாலியரம்பையிஞ்சி
கரும்புகள்விளையாநின்றகாமருகழனியெல்லாம்
வரம்புபோய்நின்னதென்னதெனக்கொளும்வழக்குமாறிக்
கரம்புகளாயவென்றாலுயிர்நிலைகரைதற்பாற்றோ. (௧௨)

பாதலம்புகுதற்காயபாதையொன்றமைப்பார்போலப்
பூதலங்குடைந்துதண்டமாயிரமகழ்ந்துபோந்துங்
காதலம்புனல்கண்காணார்காணினுங்கவருமுன்னர்
மீதலம்பயிலும்வெய்யோன்வெப்பமுண்டொழிக்குமன்றே. (௧௩)

நகர்வயினில்லந்தோறுநகுமடைப்பள்ளியெல்லாந்
தகருமடுப்பினூடுதழைந்தனமுளைத்தவாம்பி
புகர்படுமரணைபல்லிபுகுந்தனமுட்டையிட்டு
நிகரறக்கிடக்குமென்றானிகழ்த்துவதின்னுமென்னே. (௧௪)

விழைதருகுளகிலாதுமெலிதருகளிநல்யானை
மழைபொழிதுவாரம்போலமதம்பொழிதுவாரமாகிக்
குழைதருதூங்கலாயுங்குறித்துணையத்தியாயும்
பிழைகண்முற்றுறுதோலாயுமொழிந்தனபெயர்தலற்றே. (௧௫)

கதிவிசைமுரணிற்றுவுங்கவனவாம்பரிகளெல்லாம்
படுபுனலுணவோடற்றுப்பசித்தழல்வெதுப்பப்பட்டு
நெடுவிலாவெலும்புதோற்றிநெட்டுயிர்ப்பெறிந்துதேம்பி
முடிவெல்போனுக்குநீட்டிமுயங்கினபுவியையமாதோ. (௧௬)

குடம்புரைசெருத்தலாக்கள்கோதனமீனுவாகி
விடம்புரைகருங்கட்செவ்வாய்த்தெய்வமெல்லியலாரொத்த
கடம்புரைபறவையெல்லாங்கடுப்பொடுபறத்தலற்றுத்
தடம்புரைசடாயுவேபோற்றரைத்தலைநடந்தமாதோ. (கஎ)

ஒருவர்மற்றரிதுபெற்றசிற்றமுதொருகலத்து
மருவவைத்துண்ணுங்காலைமனங்கொளார்மிச்சிலென்று
வெருவவந்தொருவரீர்ப்பர்விரைந்திருவரும்வந்தீர்ப்பர்
கருதருமிதனைநோக்கிக்கரந்துவைத்துண்பாராரும் (கஅ)

மூன்னவர்வேதமோதுமுறைமையுமறந்தார்செங்கோன்
மன்னவர்படையெடுக்குமாட்சியுமறந்தார்நாய்க
ரென்னவர்துலைக்கோறாக்குமியற்கையுமறந்தார்மற்றைப்
பின்னவருழுதலென்னும்பெற்றியுமறந்தாரம்மா. (ககூ)

காய்பசிதணிக்கவேண்டிக்காட்டகத்தடுபுக்கு
மாய்தருவனைத்துநோக்கித்தழைகளுமாண்டவென்பா
ராய்தருமாயோன்முன்னுண்மண்முழுதள்ளியுண்டா
னேய்தருமுணவிலாதவித்தருகாலத்தென்பார். (உ0)

இன்னணமுயிர்கள்சாம்பல்கண்டிரங்குறுகாங்கேய
மன்னவன்றன்பண்டாரமன்னியநிதிகளெல்லா
முன்னரிதாகமொண்டுமொண்டுபல்லிடத்தும்வீசி
யன்னனும்வறியனானானரினித்தாங்கவல்லார். (உக)

நிதியெலாமாண்டபின்னர்நெடுமணிப்பணிகளென்னப்
பதியெலாம்விற்றுவிற்றுப்பாருயிரோம்பிவந்தான்
றுதியெலாப்பொருளும்விற்றுத்தோற்றபிணியாதுசெய்வான்
றிதியெலாவுயிர்க்குஞ்செய்யுந்திருநெடுமாலைச்சார்ந்தான். (உஉ)

ஆண்டவனருளினலேயலங்குமிந்நகரத்துள்ளாற்
காண்டகநிருதித்திக்கிற்கவின்றவோர்கோயில்கொண்டு
பூண்டநற்கருணையாலேபோற்றுவையுயிர்களெல்லா
மீண்டவந்தடுத்தவெய்யகலியிரித்திடாமையென்னே. (உங)

என்றளியரசன்சூழ்ந்துவேண்டலுமிணர்த்துழாய்மா
னன்றுளமிரங்கியள்ளுன்காணமுன்னணுகிமன்னு
வொன்றுவெங்காலத்தீமைக்கியற்றலொன்றில்லையேனுஞ்
சென்றுநம்பிரானைத்தாழ்ந்துதெரியவிண்ணப்பஞ்செய்வோம். (உச)

வருதியென்றரசனேடுமெருதமர்நீழன்மேய
பெருவிறலடிகட்சார்ந்துபெய்மலர்ப்பாதம்போற்றி
முருகமர்மாலைவேந்தன்முகிழ்த்தவற்கடத்தினுலே
யிருநிலத்துயிர்கள்சாம்புமெனப்பெருந்துயரத்தாழ்வான். (உரு)

அன்னவன்றுயரந்திரவாரருள்சுரத்தல்வேண்டு
மென்னரும்பரவிப்போற்றவிணர்மருதடியில்வாழு
முன்னவவென்றுபோற்றிமுகுந்தன்மிக்கிரத்தலோடுந்
தன்னருள்சுரந்துமுக்கட்டம்பிரானருளிச்செய்வான். (உசு)

மாயநீயிரந்தவாறேமன்னவற்கருளிச்செய்வோ
மாயவெங்கலியைத்தாங்குமளிதலைக்சொண்டுநம்பான்
மேயநீயின்றுதொட்டுக்கலிதாங்கியெனவிளம்புந்
தூயபேரொன்றுகோடியென்றனன்ருழுதான்மாலே. (உஎ)

தொழுதுமாணிருதித்திச்கிற்றேன்றுதன்கோயிலுற்றான்
பழுதுதீரன்றுதொட்டுக்கலிதாங்கிப்பகவனென்று
முழுதுலகவனையோதுமுழங்குமப்பெயர்சொல்வார்க
ளெழுதுசீர்த்தியராய்வெய்யகலியிரித்திருப்பரன்றே. (உஅ)

அளிகிளர்திருமாலேகவண்ணல்காங்கேயனென்பான்
களிகிளர்சிருதிமூலைகலந்தொருநீர்த்தமாக்கித்
தெளிகிளரந்நீர்மூழ்கித்திப்பியநீறுபூசி
யொளிகிளருருத்திராக்கம்பூண்டெழுத்தைந்துமுன்னி. (உகூ)

அன்னபுண்ணியநன்னீர்மொண்டமலனையாட்டியாட்டிப்
பன்னரும்வில்வமாதிப்பற்பலமலருஞ்சூட்டிச்
சொன்னபல்லுணவுமூட்டித்தொக்கபல்லுபசாரங்க
ளென்னவுமினிதுசெய்துதிருமுனரிறைஞ்சிநின்றான். (௩௦)

இன்னணம்பூசையாற்றியிலங்கிலேவேற்காங்கேய
மன்னவன்வருநாண்முக்கண்வானவன்மருதநீழன்
முன்னவனருளிச்செய்ததிறமினிமொழிவாமென்று
பன்னருஞ்சூதன்சொல்வான்சவுநகமுனியைப்பார்த்தே. (௩௧)

காங்கேயன்பூசைப்படல முற்றிற்று.

ஆ படலம் - கசு - க்கு - திருவிருத்தம் — எகூசு.

---

## பொன்மாரிபொழிந்தபடலம்.

வட்டவெண்குடைக்காங்கேயமன்னவன்றன்னுலர்க்கப்
பட்டநீராட்டியாட்டிப்பரம்பரன்றன்னைப்பூசித்
திட்டமிக்குறுநாளோர்நாளருளுவதெந்நாளென்று
முட்டகலன்பினோடுமுன்னின்றுதுதிக்கலுற்றான். (க)

வற்கடகால்மேலிட்டுயிரெலாமயங்கச்சார்டி
யற்குதலுடையதாகவடியனேவருந்திச்சோர்வே
னெற்கமிலுணர்ச்சியாளர்க்குள்ளொளியாகிநிற்குஞ்
சிற்கனசொருபவென்றேதிருவருள்செய்புநாளே. (உ)

உறுகலிவருத்தாநிற்கவுயிரொலாம்வாடநோக்கித்
தெறுவகையில்லேனுயசிதடனேன்வருந்துகின்றேன்
மறுவறுதவத்தோருள்ளம்வயங்குபுமன்னுநிற்குஞ்
சிறுமருதூரவென்றேதிருவருள்செய்யுநாளே. (௩)

வாவிமேன்மேலும்வந்துவற்கடம்வருத்தாநிற்கப்
பாவியேன்வருந்துகின்றேன்பளகிலாக்குணத்தோர்தம்மைக்
கூவியாட்கொள்ளுந்தெய்வக்குணப்பெருங்கடலேகண்ட
தேவிவாழ்பரமவென்றேதிருவருள்செய்யுநாளே. (௪)

என்றுநெஞ்சுருகினையவிருகணீரருவிபாய
நின்றுதன்வருத்தமோம்பனினைந்துவிண்ணப்பஞ்செய்யும்
பொன்றுதலில்லாவன்பந்கிரக்கமில்லாரோபோல
வொன்றும்வாய்மலராதையரிருந்தனருடைந்துபோனன். (௫)

போனவன்கிரகம்புக்குப்புந்திசெய்யுணவும்வேண்டா
னனவன்றரைமேல்வீழ்ந்துகிடந்தனனனையபோது
வானவன்ருளினலேநித்திரைவந்ததாக
வூனவன்மயக்கந்தீர்ப்பான்கனவகத்துற்றனன்றே. (௬)

நரைபொலிசிகைமுடிந்துநாலநெற்றியில்வெண்ணீறுந்
திரைபொலிமார்பிற்பூண்டதெய்வப்பூணூலுமல்க
வரைபொலிசழங்கற்பின்போக்காடையுத்தரீயத்தோடு
தரைபொலிதாளராகித்தண்டமொன்றூன்றிச்சென்றார். (௭)

விருத்தவேதியராய்ச்சென்றார்வேந்தர்கோன்முன்னநின்று
கருத்தமைதுயரமெல்லாங்காற்றுதிபெரியாளோடும்
வருத்தமொன்றின்றித்தெய்வமருதமர்சிவம்யாங்கண்டாய்
பொருத்தமின்றுன்னைவாட்டிப்பொருகலிக்கின்றுதொடடு. (௮)

நிலவுநாமமர்வன்மீகநின்றோர்பொற்கொடிமேற்றேன்றுங்
குலவுமற்றதையரிந்துகோடிநாடோறுநின்பாற்
கலவுவார்தமக்குநல்கக்காணுமென்றருளிவானோர்
பலவுபாயத்துங்காணாப்பரமனார்மறைந்துபோனார். (௯)

சற்றைவார்சடிலத்தையர்கனவில்வந்தருளிச்செய்த
வற்றைநான்முதற்கொண்டியாருமவர்தமைவிருத்தரொன்பார்
புற்றையார்பிரானேயென்றுபொருக்கெனவிழித்தான்வேந்த
னெற்றையாழியந்தேரோனுமொத்துடன்விழித்தானன்றே. (௧0)

அதிசயம்பயப்பமன்னன்சிரமிசையங்கைகூப்பி
மதிமகிழ்சிறப்பவான்றமந்திரர்முதலோர்க்கூவிப்
புகியதன்கனவுகூறிப்பொருக்கெனவெழுந்துசென்று
கதியருடெய்வமேன்மைச்சிவகங்கைகலந்துமூழ்கி. (௧௧)

நித்தியகருமமுற்றிநிறைந்துபேரன்புபொங்கச்
சத்தியஞானானந்ததனிப்பரஞ்சோதிவைகும்
பொத்தியதிருவன்மீகத்தெதிர்புகுந்திறைஞ்சிக்கண்டான்
மெத்தியதேசுமிக்கோர்பொற்கொடிவிளங்காநிற்றல். (கஉ)

கனவிடையையர்வந்துகட்டுரைத்திட்டவாறே
நனவிடைநிரம்பக்கண்டுநயந்துகாரோனக்கோடு
மனவிடையமைத்தார்செய்ததிருவருண்மதிக்குந்தோறப்
புனவிடையானைப்பல்காற்போற்றுவான்றுதிப்பான்மன்னன். (கங)

பூசைமுன்போலச்செய்துபுற்றின்மேற்றோன்றாநிற்கு
மாசையங்கொடியைவாளாலரிந்துகைக்கொண்டுமாடத்
தோசையங்கழலான்சென்றானற்றைநாளுற்றோர்க்கெல்லா
மீசைபங்குடையான்றன்பேரருணிகர்த்திருந்ததன்றே. (கச)

வழிவருநாளுமுன்போல்வந்துபூசித்துச்செம்பொன்
பொழிகொடிமுன்னைநாள்போற்பொலிந்திருந்திடவரிந்து
கழிமகிழ்சிறப்பக்கொண்டுகலந்தவர்க்கிலையென்னாது
பழிதபவன்றுநல்கும்படிநிறைந்திருந்ததம்மா. (கரு)

பற்பலநாளுமிந்தப்படியரிந்தரிந்தெடுத்துப்
பொற்புறவருவோர்க்கெல்லாம்வறுமைபோக்கிடுவானேனு
மற்புறவற்றைக்கன்றிமறுதினத்திற்கவாவும்
பெற்றிமற்றொழிந்ததின்றேயுயிர்க்கெனப்பெரிதுமுள்வான். (கசு)

ஒருதினம்பண்டுபோலவுற்றுவன்கொடியைப்பற்ற
மருதமர்முக்கண்மூர்த்திமற்றவன்கவலைதீர்ப்பான்
கருதுபைங்கொடியையுள்ளாற்செலுத்தினன்கவலையோடு
வெருவுமுள்ளலைப்பப்பற்றிவிடாதிழுத்தனன்பார்வேந்தன். (கஎ)

இழுத்தலும்புற்றுவிண்டுசிதர்ந்ததங்கிலிங்கமாய
முழுத்தசெஞ்சோதிதோன்றமுகிழ்த்தபொற்கொடியைவிட்டே
யெழுத்தடந்தோளானஞ்சியிருகரங்குவித்துவீழ்ந்தான்
பழுத்தபேரன்பன்காணும்படிவெளிவந்தாரையர். (கஅ)

கனவகம்வந்தாற்போலநனவினுங்காட்சிநல்கும்
பனவனைக்கண்டுதாழ்ந்துபார்த்திபன்றுதித்துநின்றான்
றினகரகோடியென்னத்திருவுருக்கொண்டுநின்ற
வனகமாமறையோர்பொன்பெயெழிலியைநினைத்தாரன்றே. (ககூ)

நினைத்தலுமோடிவந்துநெஞ்சநெக்குருகித்தாழ்ந்து
நனைத்தடங்கொன்றைமாலைநம்பனைபணியாதென்னக்
கனைத்தமாமுகில்காள்கண்டதேவியினெல்லைகாறு
முனைத்தபொன்பொழிதிராலோர்முகூர்த்தமென்றருளினானே. (உ0)

இவ்வண்ணமருளிச்செய்தேயிலிங்கத்துண்மறைந்தானெம்மான்
வெவ்வண்ணவேலான்மிக்சவிம்மிதனாகின்றான்
செவ்வண்ணப்பெருமான்சொற்றதிருமொழிசென்னிமேற்கொண்
டவ்வண்ணப்புயல்களெல்லாமெழுந்துவானடைந்தமாதோ. (௨௧)

வானகம்பரந்துநின்றேவளர்கண்டதேவியெல்லை
யானவைங்குரோசமட்டுமைமைதரவொருமுகூர்த்த
மீனமில்செம்பொன்மாரியெல்லையில்லாதுபெய்த
தேனகமலர்பூமாரிதேவரும்பொழிந்தாரன்றே. (௨௨)

புடவிபொன்னிறமேயென்பார்பொன்னானதென்றேவென்பா
ரிடவியபுவிமறைத்தவித்துணைச்செம்பொன்முற்றுந்
தடவியெங்கெடுத்துவந்தித்தண்முகில்பொழிந்ததென்பார்
மடவியல்வறுமைசெய்தவற்கடமொழிந்ததென்பார். (௨௩)

மன்னியபுகழ்க்காங்கேயன்வான்றவம்பெரியதென்பார்
மின்னியவனையானொக்கும்வேந்தருமுளரோவென்பார்
துன்னியவவன்செங்கோலேதூயசெங்கோல்காணென்பார்
பன்னியவவனேதெய்வம்படிக்குவேறில்லையென்பார். (௨௪)

வையகமாந்தரெல்லாமின்னணமகிழ்ந்துகூறச்
செய்யகோன்மன்னர்மன்னன்சேனையைக்காவலிட்டே
யையபொன்னடங்கவாரியமைந்ததென்மேருவென்ன
வெய்யவற்கடம்போய்நீங்கிவிலகுறக்குவித்துப்பார்த்தான். (௨௫)

மலையெனக்குவிந்தசெம்பொன்வளமுழுதமையநோக்கி
யிலையெனற்கிசையார்யாருமிரந்திடப்படுவோராகக்
கலையெனப்படுவவெல்லாங்கற்றுணர்ந்தவருஞ்செல்வ
நிலையெனவாரிவாரிக்கொடுத்தனனிருபர்வேந்தன். (௨௬)

மிடிகெடமுகந்துசெம்பொன்வேந்தர்கோன்கொடுக்கும்போதே
படிகெடவருத்திநின்றபாவவற்கடகாலத்தின்
குடிகெடவெழுந்துகொண்மூகுணாகடலுண்டுவெய்யோன்
கடிகெடவிசும்புபோர்த்துக்கதிர்த்தவில்லொன்றுவாங்கி. (௨௭)

மிடிபுரிகாலந்தன்னைவாள்கொடுவெட்டியாங்குக்
கடிபுரிதடித்துவீசிச்சளசளவென்றுகான்ற
படிபுரிகளிநல்யானைப்பருஉப்புழைக்கானேர்தாரை
வெடிபுரியேரியாதிவெள்ளமாய்முடியமாதோ. (௨௮)

விரும்புநீரெங்கும்போர்ப்பமென்பணையுழுதலாதி
யரும்புபஃறொழிலுமேன்மேன்மூண்டனவாதலாலே
யிரும்புலமெங்குஞ்செந்நெல்வெண்ணெலாதிகளுமீண்டக்
கரும்புபைங்கதலியாதிகளுலினபாண்டிநாடு. (௨௯)

உரம்பெரலிவறுமைநீங்கியொழிந்துசெல்வஞ்செருக்கி
வரம்பொலிபாண்டிநாடுவாழ்தரக்கண்டமன்ன
னிரம்பொலிநறுநீர்வேணிநின்மலனருளாலிந்தப்
பரம்பொலிமகிழ்ச்சியெங்கும்பராயதென்றுவகைபூத்தான். (௩௰)

சிறுமருதூரின்மேயதெய்வநாயகர்க்குமன்பிற்
பெறுமொளிர்கருணைமேனிப்பெரியநாயகிக்கும்பாசந்
தெறுமொருகுஞ்சிதத்தாட்டிருநடராசருக்கு
மறுதியின்மற்றையோர்க்குமாலயமெடுக்கலுற்றான். (௩௧)

வானளவோங்குசெம்பொற்கோபுரம்வயங்குநொச்சி
யூனமில்கருவிலத்தமண்டபமுனையாநின்ற
வேனவுஞ்செம்பொனாற்செய்திலங்குபன்மணிகால்யாத்துக்
கூனல்வெஞ்சிலையானன்னாட்கும்பாபிடேகஞ்செய்து. (௩௨)

குடைகொடிமுதலாயுள்ளவிருதும்பொற்குடமுன்னாக
மிடைபல்பாத்திரமுமோலியாதிவில்வீசுபூணு
மடைதருகனகவாடையாதிவட்டமும்பலூரு
முடைமதக்களிறுமாவுமெண்ணிலவுதவினானே. (௩௩)

நித்தியவிழவுமுன்னாநிகழ்பலவிழவுஞ்செய்து
சத்தியஞானானந்தத்தனிப்பரஞ்சுடர்க்குயாரும்
பொத்தியவொளிர்பொன்மாரிபொழிந்தவரென்னும்பேரிட்
டொத்தியனகர்க்குஞ்செம்பொன்மாரியென்றுரைத்தானும். (௩௪)

பொலிதருசெம்பொன்மாரிபொழிந்தவர்திருமுன்னாக
வொலிதருகழற்கான்மன்னனெஞ்சியவொளிர்பொன்னெல்லா
மலிதரும்படிபுதைத்துவைத்தனன்கணங்கள்காத்து
நலிதருவருத்தமாக்குமாங்குநன்னாநனையின்னும். (௩௫)

எண்ணருநாள்களிவ்வாறிருந்தரசாட்சிசெய்து
கண்ணரும்பொன்பொழிந்தகண்ணுதலருளினாலே
நண்ணருஞ்சிவலோகத்தைநண்ணிவீற்றிருந்தான்வானோர்
மண்ணருமகிழ்ச்சிபொங்கமலர்மழைசொரிந்தாரன்றே. (௩௬)

போற்றுபொன்மாரியூரிற்காங்கேயன்பொலியமுந்நா
ளாற்றுநீர்படிவோர்யாருமரும்பெரும்போகத்தாழ்வார்
நீற்றுமாமுனிவசெம்பொன்பொழிந்தமைநிகழ்த்தினேமேற்
சாற்றுதுங்கோட்டியென்றுதவப்பெருஞ்சூதன்சொல்வான். (௩௭)

பொன்மாரிபொழிந்தபடலம் முற்றிற்று.

௯ படலம் - ௪௭-க்கு - திருவிருத்தம் — அ௩௩.

---

# சிலைமான்வதைப்படலம்.

ப்ஞ்சுசேரடிபங்கருள்செய, மஞ்சுசான்றகனசத்துண்மன்னவ [தே
னெஞ்சுசெம்பொன்புதைத்திருக்கின்றசொல், விஞ்சுமானிலத்தெங்கும்விராய

வடபுலத்தவன்வாய்ந்தபடையினு, னடல்மிகுத்தவனுழியவாவினன் [ன்.
மடனுடைச்சிலைமானெனும்பேரினன், விடனெருத்தன்விழைந்திதுகேட்டன

கேட்டபோதுகிளர்ந்தெழும்வேட்கையா, ளுட்டமார்கண்டதேவியைநண்ணி
யே,யீட்டரும்பொனெலாங்கவர்வாமெனு, வோட்டமாய்வருவான்படையோட
[ரோ. (௩)

வலத்துமிக்கவடபுலத்தான்வந்து, கலக்கும்வார்த்தைமுன்கண்டவர்கூறிடத்
தலத்துமேவியயாருமவன்றனை, விலக்குமாற்றலிலேமென்றுவெம்பினர். (௪)

என்னசெய்துமினியெனநாடியே, முன்னவன்றிருக்கோயிலைமுன்னினு
ரன்னமன்னவனங்கொருபாலுடைச், சொன்னமாரிபெய்தானைத்தொழுதனர்.

சம்புசங்கரதற்பரவற்புத, வெம்புமெங்கண்மெலிவைத்தவிர்த்தருள்
வம்புசெய்யும்வடபுலத்தான்வந்துன், பம்புசெம்பொன்கொளாவகைப்பண்ணியே.

என்றுகூறியிறைஞ்சிமுறையிட, வன்றுநாயகனுகாயவாணியா
லொன்றுமாறுளைப்பானென்றுமஞ்சலீர், வென்றுமற்றவனுருயிர்வீட்டுவோம்.

பின்னமில்லாப்பெரியசிறையிலி, சின்னமேயசிறியசிறையிலி
யென்னவாழ்நம்மிடபமிரண்டையு, முன்னமேவமுடுக்கிவிடுமென்றான். (௮)

என்றசொற்செவியேற்றுமகிழ்ந்தனர், குன்றநேர்தருகுண்டையிரண்டையு
மன்றவையன்றிருமுன்வரவழைத், தொன்றநல்லுபசாரம்புரிவரால். (௯)

ஆட்டிநீரினரியவுணவெலா, மூட்டியப்பியுவப்புறுசாந்தந்தார்
சூட்டியங்கைதொழுதுபகைவனை, மாட்டிவம்மினென்றார்தலவாணரே. (௧௦)

தலையசைத்துப்பயப்பயத்தாள்பெயர்த், திலையபிப்பிலமாலையிலங்குற
நிலையகாரிருள்கோட்டணிநீக்கிட, மலைபெயர்ந்தெனச்சென்றனமால்விடை. ()

கோடுகொண்டுவென்மீகங்குதர்ந்துநாத், தோடுகொண்டிருதுண்டந்துழாவியே
மாடுகொண்டெழுவாஞ்சையனைத்துரீஇ, நீடுகொண்டகடுப்பொடுநேர்ந்தன. ()

காலினாற்சிலர்தம்மைக்கலக்கிடும், வாலினாற்சிலராருயிர்மாய்த்திடும்
வேலினாற்பொலிவீரர்தம்முட்சுவைப், பாலினாற்செய்திறந்தபசுக்களே. (௧௩)

பூட்டிநாண்விற்பொருகணையேவிட, வீட்டியன்னவையாவும்விளாந்தெழீஇக்
கோட்டினாற்குத்திச்சாய்த்துச்குளிறிடு, மீட்டினாற்பொலிபுல்லங்களென்பவே.

இன்னவாறுபடையினையீறுசெய், தன்னவெஞ்சிலைமானையடர்ந்தெழுந்
துன்னவாமவனேதியொருங்குமேற், றுன்னவாலினடித்துத்துடைத்தன. (கரு)

கல்லினைப்பொடிகண்டிடுதோளினான், வில்லினைப்பொடிகாணமிதித்தவன்
மல்லினைப்பொடிதோற்றிவயங்கிளர், புல்லினைப்பொடிபூணிமுழங்கின. (கசு)

ஆயகாலையவன்சினங்கொண்டுநேர், பாயவேறுகளுநெதிர்பாய்ந்திடத்
தீயமார்பிற்றிணிமருப்பாழ்ந்தன, போயதாலவனுவிபுலம்பியே. (கஎ)

மீண்டுநாயகன்கோயிலைமேவின, வாண்டியாருமதிசயமெய்தின
நீண்டுவான்சிவகங்கையிரும்புகழ், வேண்டுமோநவில்வாமெனுஞ்சூதனே. (கஅ)

சிலைமான்வதைப்படலம் முற்றிற்று.

ஆ படலம் - கஅ - க்கு - திருவிருத்தம் — அருக.

## சிவகங்கைப்படலம்.

திருவளர்சிறப்புவாய்ந்தசிவகங்கைமூழ்குவோர்க்கு
மருவளர்தருமநல்கும்வளத்தினற்றருமதீர்த்த
முருவளரருத்தநல்குமுண்மையாலருத்ததீர்த்தங்
கருவளர்காமநல்குமேதுவாற்காமதீர்த்தம். (க)

பெறலருமுத்திநல்கும்பெற்றியான்முத்திதீர்த்த
முறலருந்தீர்த்தமெல்லாமுறுதலிற்சுறுவதீர்த்த
மறலருஞானமேன்மேல்வளர்த்தலான்ஞானதீர்த்தஞ்
செறலருமிட்டமெல்லாஞ்செறித்தலினிட்டதீர்த்தம் (உ)

குட்டநோய்தொழுநோய்பொல்லாச்குன்மநோய்விழிநோய்வெய்ய
கட்டநோய்செய்த்தோராதிகாலுநோயிரக்கமூற்றும்
விட்டநோயென்றுயாரும்விளம்புநோயனைத்துமாய்ந்து
பட்டநோயாகுமந்தப்பட்டநீர்மூழ்குவார்க்கே. (ங)

பெயர்வரிதாயமண்ணைபிரமராக்கதம்வெம்பூத
மயர்வருமனையதீர்த்தமாடினோர்தமைவிட்டேகு
முயருறுமனையதீர்த்தத்தொருதுளிபட்டபோது
மயருறுபாவமெல்லாம்வயங்கழலிட்டபஞ்சாம். (ச)

அன்னமாதீர்த்தக்கோட்டிற்றென்புலத்தவருக்காற்று
நன்னர்வான்செய்கையெல்லாநயந்தனர்நாடியாற்றி
லென்னபாதகரோயேனுமெய்துவர்சுவர்க்கமாசு
தன்னமுமடையாரெல்லாப்போகமுந்தழுவிவாழ்வார். (ரு)

ஆண்டெயர்தோற்றமாதத்தோற்றமீரயனம்யாரும்
வேண்டுமீருவாவியாளமதிகதிர்விழுங்குகால
மீண்டுநற்சோமவாரமிவைமுதலியநாளன்பு
பூண்டதிற்படிவோரெய்தும்புண்ணியமளவிற்றாமோ. (சு)

அலர்செறிகற்பகாட்டினமர்ந்துசெயரசுவேண்டின்
மலர்மிசையிருக்கைவேண்டின்மாசுணக்கிடக்கைவேண்டி
னுலர்வவென்றிவற்றையெள்ளியுறுபெருவாழ்க்கைவேண்டிற்
பலர்புகழனையதீர்த்தம்படிந்தினிதாடல்வேண்டும். (எ)

அன்னநீரகத்துதித்தநவலைமீனுதியாய
வென்னவுங்கயிலாயத்தையெய்திவீற்றிருந்துபன்னாட்
பின்னரத்தலத்தேவந்தோர்பெறலரும்பிறவியுற்று
நன்னர்மெய்ஞ்ஞானம்பெற்றுநம்பிரான்பதமேசாரும். (அ)

புண்ணியம்பயக்குநாளிற்பொங்குமத்தீர்த்தமூழ்கிக்
கண்ணியமருதவாணர்கழலடிக்கன்பராய
தண்ணியமறையோர்மற்றைச்சாதியோரொவர்க்குங்கையி
னண்ணியசெம்பொனுதிநல்குமாதவத்தின்மிக்கார். (கூ)

மனைமகவாதியெல்லாச்சுற்றமுமருவவாழ்ந்து
கனைகட்லுலகநீத்துக்கற்பகநாடுபுக்குப்
புனைபெரும்போகமார்ந்துபுண்ணியனருளாலீற்றிற்
றனைநிகர்சிவலோகத்திற்சார்ந்துவாழ்ந்திருப்பரன்றே. (க0)

விரிதிரைபரப்புங்கங்கைகாளிந்திவிருத்தகங்கை
புரிதருயமுனைகண்ணவேணிபொன்பொலிகாவேரி
யிரிதலில்பொருநையாதியெய்துபுபன்னாண்மூழ்கி
னுரியபேறனையதீர்த்தத்தொருதினம்படியினுண்டாம். (கக)

பற்பலவுனைப்பதென்னைபாரிடத்தெவருஞ்சென்று
சொற்பொலியனையதீர்த்தந்துளைகமுற்றுதேயென்னி
லற்புறவரவழைத்தாவதுபடிதருதல்வேண்டு
மற்பொலியதுவுமுற்றுதென்னின்மற்றுனைப்பக்கேண்மோ. (கஉ)

சாற்றுமந்நீரிற்றோய்ந்ததவமுடையனைக்கண்டேனும்
போற்றுதல்வேண்டுமென்னுரரியரோற்புகலத்தீர்த்த
மேற்றவழ்காற்றுவந்துமேனியிற்படுமாறேனு
மாற்றுதல்வேண்டும்போகமாதிகள்விரும்பினேரோ. (கங)

மன்னியகதிரோன்றீர்த்தமதியவனியற்றிதீர்த்தம்
பன்னியசடாயுதீர்த்தம்பரவுகாங்கேயன்றீர்த்த
முன்னியபிரமனுதிமூவரும்புரிந்ததீர்த்த
நன்னியமத்துமேன்மைநவின்றனமுன்னங்கண்டாய். (கச)

எண்ணரும்புகழ்சாறேவியியற்றியவனையதீர்த்தக்
கண்ணரும்பெருண்மயாரோகணித்தெடுத்துரைக்கவல்லார்
பண்ணருந்தவத்தினுரோபற்றுமத்தலத்தின்மேன்மை
விண்ணருமவாவுநீரதறியெனவிளம்புஞ்சூதன். (க௫)

தீர்த்தவிசேடப்படலம் முற்றிற்று.

ஆ படலம் - கஅ - க்கு - திருவிருத்தம்— அகூகூ

---

## தலவிசேடப்படலம்.

பார்கெழுகயிலைமேருப்பருப்பதம்வாரணசி
சீர்கெழுதிருக்காளத்திதிருவாலங்காடுகாஞ்சி
யேர்கெழுமுதுகுன்றண்ணுமலைகழுகிருக்குங்குன்ற
மார்கெழுதில்லைகாழியணியிடைமருதூராரூர். (க)

ஆலவாய்திருக்குற்ருலமணியிராமீசமின்ன
சீலமார்தலங்களுள்ளுஞ்சிவபிராற்கினியதாய
மூலமாந்தலமாயெல்லாவளங்களுமுகிழ்ப்பதாயெக்
காலமுமுளதாயோங்குதலங்கண்டதேவியொன்றே. (உ)

புண்ணியமுதல்வியென்னும்புவனங்களீன்றதாயே
நண்ணியவிருப்பின்மேவிநற்றவம்புரிந்தாளென்னி
லெண்ணியவனையதானம்போல்வதொன்றினியுண்டென்று
கண்ணியவமையுங்கொல்லோகணையுமுப்புவனத்துள்ளும். (ங)

உலகெலாமீன்றசெல்வியுறுதவம்புரிந்ததன்றி
யலகிலத்தவத்தின்பேருவையர்பாலளவிலாது
நிலவுபல்வரமுங்கொண்டுகிரப்பினண்மேலுமென்னிற்
குலவுமத்தலத்துக்கொப்பொன்றுளதெனல்கூடுங்சொல்லோ. (ச)

மிடிதவிர்த்தருளாயென்றுவேண்டிடுமடியர்க்கென்றும்
படியில்பொற்காசுமுன்னுப்பலவளித்திட்டதன்றி
நெடியபொன்மாரிபெய்ததுண்டுசொனெடுநீர்வைப்பி
லொடுவிலத்தலத்திற்கொப்பென்ருேருதலஞ்சொல்லப்போமோ. (ரு)

அன்னமர்தலத்திலாதிசைவர்களமருமாறும்
பன்னகாபரணனன்பிற்பனவர்மற்றுள்ளோராய
வென்னருமமருமாறுமிடஞ்சமைத்துதவுவோரு
மன்னுமற்றவர்க்குவேண்டுமடைமுதல்வழங்குவோரும். (சு)

சத்திரமியற்றியன்னதானஞ்செய்திடுகின்ருேரு
மொத்தியன்மடங்களாக்கிமுனிவருக்குதவுவோரு
மெத்தியபொழிலுண்டாக்கிவெள்விடைப்பெருமாற்கென்று
பத்தியினுதவுவோரும்பழனங்கணல்குவோரும். (எ)

திருமுடியாட்டுமாறுதிருந்துபால்பொழியாநிற்கும்
பெருமடித்தலத்திணுக்கள்பேணிநன்குதவுவோரு
மருவியகிலமாயுள்ளமண்டபமதின்முன்னுய
பொருவில்பற்பலவுநன்குபொலிதரப்புதுக்குவோரும். (அ)

திருவிழாச்சிறப்பிப்போரும்பூசையைச்சிறப்பிப்போரு
மருவியவேனிற்காலம்வளங்கெழுதண்ணீர்ப்பந்தர்
பொருவரவைக்கின்ருேருநந்தனம்பொலியச்செய்து
திருவமர்பள்ளித்தாமஞ்சாத்திடல்செய்கின்ருேரும். (கூ)

இன்னவர்பலருமண்ணிலிருங்கிளைசூழவாழ்ந்து
பின்னருஞ்சுவர்க்கமேவிப்பற்பலபோகமார்ந்து
பின்னர்நம்பெருமான்செய்யும்பேருபகாரத்தினாலே
யன்னவன்சிவலோகத்தையடைந்துவாழ்ந்திருப்பரன்றே. (௧0)

பற்பலவுரைப்பதென்னைபரிடத்தறஞ்செய்வோர்க
ளற்புதம்பயவாசிற்குமத்தலமடைந்துசெய்யி
னற்பயன்மேருவாகுநவிலனுவளவேயேனுங்
கற்பனையன்றீதுண்மைகரிசறுத்துயர்ந்தமேலோய். (௧௧)

இத்தகுபுராணத்தாங்காங்கிசைத்தனமனையதானத்
துத்தமவிசேடமெல்லாமுறைத்திடமுற்றுங்கொல்லோ
சத்தறிவின்பரூபத்தனிமுதல்சரணஞ்சார்ந்த
சுத்தமெய்த்தவத்தோயென்றுசொற்றனன்சூதமேலோன். (௧௨)

சாற்றருமகிழ்ச்சிபொங்கச்சவுநகமுனிமுன்னோர்
மாற்றருந்தலத்துச்சூதமாமுனிபாதம்போற்றி
யாற்றருமகமுமுற்றியனைவருமெழுந்துபோந்து
சேற்றருநறுநீர்வாவிச்சிறுமருதூரையுற்றார். (௧௩)

தெளிதருநன்னீராயசிவகங்கையாதித்தீர்த்தங்
களிதருசிறப்பின்மூழ்கிமருதடிகலந்துளானை
நளிதருகருணைவாய்ந்தபெரியநாயகியைப்போற்றி
யளிதருமுவகையோராய்நைமிசமடைந்துவாழ்ந்தார். (௧௪)

பழுதகல்கண்டதேவிப்புராணத்தைப்படிப்போர்கேட்போ
ரெழுதுவோரெழுதுவிப்போரிரும்பொருளாய்வோர்சொல்வோர்
முழுதமைசெல்வத்தாழ்ந்துமுனிவரும்போகமாந்திப்
பொழுதுப்பற்பலதீர்ந்தீற்றிற்புண்ணியனடியேசார்வார். (௧௫)

வேறு.

சீர்பூத்தபொன்மாரிசிறுமருதூரெனுங்கண்டதேவிவாழ்க
பார்பூத்தவனையதலபாலனஞ்செய்வணிகரெல்லாம்பரவிவாழ்க
கார்பூத்தகுழற்செவ்வாய்ப்பெரியநாயகியம்மைகருணைவாழ்க
வேர்பூத்தபொன்மழைபெய்தவர்மணிமன்றெடுத்தபொற்றாளென்றும்வாழ்க. ()

தலவிசேடப்படலம் முற்றிற்று.

ஆக படலம் உ0-க்கு திருவிருத்தம்—அஅ௪.

கண்டதேவிப்புராணம்
முற்றிற்று.

